2642 24-2

ஓம் நமசிவய ஓம் நமசிவய ஓம் நமசிவய

உ

ஓம் ஸ்ரீ கணேசாய நம: ஸ்ரீ சாரதாயை நம:

ஸ்ரீ சங்கரபூஜ்ய பகவத் பாதாசார்யரவர்களின்

பிரதம சிடரும்

ஸ்ரீ விஷ்ணுவின் அவதாரமுமாகிய

**ஸ்ரீ பதும பாதாசாரிய ஸ்வாமிகளால்**

சம்ஸ்கிருத பாஷையில்

திருவாய்மலர்ந்தருளப்பட்ட

# ஸ்ரீ சிவபஞ்சாக்ஷர பாடியமும்,

ஸ்ரீ அரதத்தாருளிய

## ஸ்ரீ சுபோதினி யென்னு முரையும்,

கோயிலூர் மடாலயம்

ஸ்ரீ வீரசேகர ஞானதேசிகர் பாதசேகரராகிய

**ஸ்ரீ சுப்பையா ஸ்வாமிகளால்**

செந்தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு

சென்னை வியாசர்பாடி

**ஆநந்தாஸ்ரமம் மூர்த்திசுவாமிகளால்**

வேவர்லி பிரஸில் பதிப்பிக்கப்பட்டன.



Price As 4.] [விலை அணா ௪.

1916 — 4 அணா

24-2

உ

ஓம்

மஹாகணபதயேநமஃ

ஸ்ரீ சாரதாயைநமஃ

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 2 | 15 | விஷயெ | விஷ்யெ |
| 3 | 22 | விஷயெ | விஷ்யெ |
| 5 | 17 | [அவஸ்தை | [விரக்த அவஸ்தை |
| ,, | 19 | விஷயெ | விஷ்யெ |
| 7 | 4 | ஜபெய | ஜ்பெய |
| ,, | ,, | யெநூ்யம் | ஜைநூ்யம் |
| ,, | 5 | விஷி | விஷ்ழி |
| 40 | 16 | ஞனும் ன்றுண | ஞனும் என்றுண |
| ,, | 21 | சததிய | சத்திய |

... ... ஆயமதோர வியாக்கியான மருளிச் செய்யப்பட்டது. அதற்கு ஸ்ரீ அரதத்தசிவாசாரிய ஸ்வாமிகளால், சுபோதினி, என்னும் ஓர் உரையும் ஆரிய மொழியானே யாற்றப்பட்டுள்ளது. அவை ஆரிய மூணர்ந் தார்க்கன்றியும் நந்தமிழ்மக்கட்கும் உபயோகமாமாறு ஸ்ரீ கோயிலூர் மடாலயம் ஸ்ரீமத் வீரசேகரஞான தேசிகர் பாத சேகரரான ஸ்ரீ சுப்பைய ஸ்வாமிகளால் முமுக்ஷுஜன உபகாரார்த்தமாகச் செவ்விய தமிழ்நடையில் மொழிபெயர்க் கப்பட்டன.

24-2

ஓம்
மஹாகணபதயேநமஃ
ஸ்ரீ சாரதாயைநமஃ

# முகவுரை.

எல்லாம் வல்ல இறைவன், மாநுடவாக்கையினை யெடுத்துள்ள நம்மனோர், ஆணவமலத்தாலார்ப்புண்டு, ஜனனமரணப்பிரவாகரூபதுன்ப ஆர்ணவத் தமிழ்ந்து கிடத்தலை நோக்கி, பரமகருணையினால் பிரஹ்மானந்தவடிவ மோக்ஷத்தினை அடைவிப்பான் வேண்டித் திருவாய்மலர்ந்தருளிய இருக்காதி நான்கு வேதங்களின் ஹிருதய பூஷணவடிவ ஸ்ரீ பஞ்சாக்ஷரம் எனப்பெயரிய மஹாமந்திரத்தின் அர்த்தங்களை, ஐயந்திரிபற விசாரித்துணர்ந்து, அவ்வர்த்தத்திற் சித்தம் நிலைபெற்று, அப்பிரதிபந்தவடிவ மோக்ஷவடைவைக் கரதலாமலகம்போலப் பண்டிதர்முதல் பாமரரீறாய்க் கிடந்துள்ள சர்வான்மாக்களும் தெற்றெனவுணருமாறு, ஸ்ரீ பரமேசுர மாநுஷலீலா விக்ரகவடிவினரா யெழுந்தருளிய, ஸ்ரீ மத்ஜகத்குரு சங்கரபகவத்பாதாசார்ய ஸ்வாமிகளின் பிரதம சீடரும், ஸ்ரீ விஷ்ணுவின் அவதாரமுமாகிய ஸ்ரீ மத் பதுமபாதாசார்ய ஸ்வாமிகளால், அம்மந்திரராஜவடிவ ஸ்ரீ பஞ்சாக்ஷரத்திற்கு, வடமொழியில் அரியதோர் வியாக்கியானமருளிச் செய்யப்பட்டது. அதற்கு ஸ்ரீ அரதத்தசிவாசாரிய ஸ்வாமிகளால், சுபோதினி, என்னும் ஓர் உரையும் ஆரிய மொழியானே யாற்றப்பட்டுள்ளது. அவை ஆரிய முணர்ந்தார்க்கன்றியும் நந்தமிழ்மக்கட்கும் உபயோகமாமாறு ஸ்ரீ கோயிலூர் மடாலயம் ஸ்ரீமத் வீரசேகரஞான தேசிகர் பாதசேகரரான ஸ்ரீ சுப்பைய ஸ்வாமிகளால் முமுக்ஷுஜன உபகாரார்த்தமாகச் செவ்விய தமிழ்நடையில் மொழிபெயர்க்கப்பட்டன.

இந்நூலின்கண் பிரதிபாதிக்கப்பட்டிருக்கும், ஸ்ரீ பஞ்சாக்ஷர மஹாமந்திரத்தின் ஒவ்வோரக்ஷரங்கட்கும், சுருதி சம்மதமாய் நவவிதமாக உரைவரையப் பட்டுள்ளன. அன்றியும், அவ்வொன்பது விதமான அர்த்தங்களின்கண்ணேயே ஸ்ரீ வியாசபகவான் இயற்றிய வேதாந்த சூத்திரங்களின் மீது, ஸ்ரீமத்ஜகத்குரு, சங்கரபகவத்பாதாசாரிய ஸ்வாமிகளால், ஒவ்வோரத்தியாயத்தின், ஒவ்வோர்பாதங்களின், ஒவ்வோரதிகரணங்களானும் அதி ககன கம்பீரமாய்க் கூறியுள்ளனவாய சாரீர சூத்திரபாடியத்தின் சுருங்கிய தாத்பரியங்களை ஆங்காங்கெடுத்து அடக்கிக் காண்பித்திருக்கின்றனராதலின், இவ்வியாக்யானார்த்தத்தைச் சிந்தனஞ் செய்வோர்கட்கு, மதசம்பந்தமாய் ஈசுரநிச்சயஞ்செய்யுங் குதர்க்கமனோபீதியொழிந்து, அவ்வம்மதங்களின் உண்மைக்கருத்தித்தன்மைத்தெனத்தெற்றன விளங்கி, மனோவிருத்தியி னுபசாந்தமும், ஜீவப்பிரஹ்மைக்கிய வடிவகைவல்ய அடைவுமுண்டாம். அன்றியும், கேவல அர்த்தஞானமின்றியும் ஸ்திரீ, பாலர்களேனும், நாடோறும் விதிப்படி இப்புத்தகத்தைப் பூஜித்து வருவார்களாயின், ஐஸ்வரிய, புத்திர, வாகன, பூஷண, கிரக, கீர்த்தியாதி இம்மைப்பயனினடைவும் எளிதினுண்டாமாதலின், மக்களியாக்கையினையெடுத்த ஒவ்வொருவரிடத்தும் இந்நூல் இன்றியமையாதனவாயிருக்கத் தக்கதேயாம்.

இப்புத்தகத்தை ஸ்வயநலத்தினை நாடாது, பிரஹ்மநிஷ்ட பண்டிதர்களின் அன்னதான கைங்கர்யத்தின் பொருட்டு அச்சியற்றிக்கொடுத்த வேவர்லி பிரஸ் சொந்தக்காரர் சி. மு. சிங்காரசிவா அவர்களது, பெருங்குணங்கள் மறக்கத்தக்கனவன்றாம்.

சுபம்! சுபம்!! சுபம்!!!

இங்ஙனம்:

**மூர்த்திசுவாமி,**

ஆநந்தாஸ்ரமம், வியாசர்பாடி, சென்னை.

சிவமயம்.

ஓம் ஸ்ரீ கணேசாய நம:

ஸ்ரீ சாரதாயை நம:

# ஸ்ரீ சிவபஞ்சாக்ஷரபாடியமு முரையும்.

## குருவணக்கம்.

விந்தை மிக்கநல் வீரமா தவவென திறைவ
ஐந்து மெய்க்கர வைந்தெழுத் தரும்பொரு ளறிவ
திந்த வாறென வின்றமிழ்ச் சொலவெனக் கிசைந்தே
சிந்தை மேவிநற் சீரருட் செய்துகாத் ததியால். (1)

பதும பாதன் பதும பதமலர்
இதம தாக விதயத் திருத்தியே
முதுபஞ் சாக்ஷர பாடிய முற்பொருள்
மதிய ளவுத மிழில் வதுப்பனல். (2)

தெள்ள றிஞருக் கின்பமே செய்துசீர்ச் சிவைசேர்
வள்ள லைப்பணிந் தன்பிறல் வண்ணவைந் தெழுத்தின்
உள்ள பாடிய வுரையினை யுரூற்றுவ னுணர
விள்ள ரியசு போதினி மெய்ப்பெய நறவே. (3)

ஸ்ரீமத் பகவான் பாடியக்காரரின் முக்கிய சிஷ்யராய ஸ்ரீபத்மபாதாசாரியர், சகல முமுக்ஷுஜன ஹிதத்தின் பொருட்டுச் சாரீரக சூத்திர பாடிய விசார ஆற்ற லற்றவர்க்கு ஸ்ரீமத் பரமஹம்ச பரிவிராஜக ஸ்ரீமத் பகவத்பாத ஸ்ரீசங்கரா

சாரிய சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய சாரீரக சூத்திர பாடியத்தின் சுருங்கிய கருத்தங்கி சத்தை ஸ்ரீமத் பஞ்சாக்ஷரீ நம: சிவாயவென்னும் மந்திரராஜ பாஷியம் புரிபவராயுணர்த்த விரும்பி, அதற்கு 23 சுலோகங்களால் நூற்செய்யும் வேட்கையராய் அந்நூலினிது முடிதற்பொருட்டும், குருபாரம் பரியமாய் விரிந்து விளங்கற்பொருட்டும், ஈசுரார்ச்சனத்தை யுள்ளடக்கியதும் பரமானந்த சிவரூப வஸ்துநிர்த்தேசவடிவதும் ஆயமங்கலத்தை ஆசரித்து ஆவிருத்தியாதியால் வியாக்கியானவேற்றுமையால் விடயப்பிரயோஜனங்களைக் குறிப்பிக்கின்றார்:—

ஓம் ஶ்ரீகணேஶாய நம:, ஓம் நம:ஶிவாயேதி மந்த்ர:।

[அதனதுமுதல் வியாக்கியானம்.]

த்ராணோ ஹி நமோவாக்யஸ்ய நம்ஶ: ப்ரக்யதேஷ்வயா।
ஹலம் ப்ரத்யவாயம்ஸ்யாக் த்ராஜ்யம் வ த்ரஹலாதிகம்॥
த்யஜாமீதிதிம்ஸவ பும்வ தாணபுராதிஹலவிலயே। (1½)

**நற்றியா கமதே நமசின்றன் வாச்சியம்**
**நற்பிர கிருதியின் பாதும்**
**சேற்றமில் பலமோ விதுதிவாச் சியமாம்**
**தியாச்சிய மிலேபல முதலாம்**

இற்றுதி யாகிக் கின்றன னிஃதீ
 தியாவையு மின்பொரு ளன்தும்
பெற்றிட விகத்திலாதுமேன் பதுவே
 பெறலரும் பொருளதா மைந்த. (1)

த்யாகஃ நம: சப்தத்தின் வாச்சியப்பொருளாம்; அதுவும் கருமகாண்ட சாஸ்திரத்தே பிரசித்தமாம் "**ஊதமெஉா நூ° ஸொவகரணஂ நமஃ**" (உங்கட்குபகரணசகித இவ்வன்னத்தை நமிக்கின்றேன்) என்பதாதியில், தியஜிக்கின்றேன் என்பது பொருள். '**ஶிவாய**' என்பதன் கண்ணே பகுதியாய சிவசப்தத்தின் வாச்சியம் ஆநந்தமாம்; ஆநந்தோபலக்ஷிதமாயினிக்கூறும் அர்த்தாதி நான்கும் '**ஶிவாய**' என்பதன்கண்ணே விகுதியாய் நான்காம் வேற்றுமையின் வாச்சியார்த்தமாய பலமாம். உள்ளம் விரும்பிய பொருட்சித்தி யென்பது பொருள். அருத்தத்தாலாக்ஷிப்தமாய்த் தியாகிக்கத்தக்க பொருளைக் கூறுகின்றார், தியாஜ்யம் பத்ர பலாதிகம் என. பதப்பொருளைப்பகர்ந்து வாக்கியப்பொருளை வழங்குகின்றார், **த்யஜாமீஷிஃ** என. கந்தபுஷ்பாதிகளைக் கவர்ந்து அநாதியாய்க்கவர்ந்த (புத்தியாதி யனாத்மப்பிரபஞ்ச அர்த்தாதி நான்கன் சித்தியின் பொருட்டு முடிந்தபடி கந்தாதிகளை) புத்தி முதலியவற்றையும் தியாகிக்கின்றேன்; இனி **த்யஜாமீஷிஃஸவஂ வதாணஂாஹ ஸிஃயெ** எனப்பதங்களின் ஆவிருத்தியாதியால் வாஞ்சித்த

படியாய பொருட்கற்பனையால் மங்கல விஷயப் பிரயோஜனப் பிரதிபாதகங்களாய வருணங்கள் வருணிக்கப்படுகின்றன. ஆண்டு மங்கல விஷயகத்தை மலர்கின்றார் :—
**த்யஜாமீத³மித³ம் ஸர்வம்** என. **இத³ம்ஸர்வம்** கிடைத்தபடியாய கந்தபுஷ்ப பத்திர பல நைவேத்திய உபகாராதிகளை, சிவத்தின் பொருட்டுத்தியாகிக்கின்றேன்; சமர்ப்பிக்கின்றேன் என்பது பொருள். எப்பயனின்பொருட்டு, சிவத்தின் பொருட்டு; சிவசப்தோபலக்ஷிதமாய அருத்த தரும காம மோக்ஷங்களாய நான்கும்; ஈண்டே, இத்தேகத்தேயிருக்கவே சித்திக்கும் பொருட்டு; அடையும் பொருட்டென்பது பொருள். இதுமுதல் வருணகமாகும்.

[இரண்டாவது வருணகத்தால் விடயத்தைக்
குறிப்பிக்கின்றார்.]

**த்யஜாமீதி இத³மித³ம்ஸர்வம்** இஃதெனக்கவரப் பெற்றதும், அத்தியஸ்தமும், அநான்மப் பிரபஞ்சமும் ஆய இல்காயம் பொறியுட்கரணாதி யாவற்றையும் தியாகிக்கின்றேன்; அநாத்மாக்களென விலக்குகின்றேன். ஈண்டு இதந்தை விஷயமாய அந்தக்கரணாதியத்தியஸ்த உபாதிகளின் தியாகத்தால் பேதகமின்மையின், பலத்தன்மையானே பிரத்தியக்கபின்ன அத்விதீயப் பிரஹ்மம் பிரதிபாதிக்கப்பெறுதலின் ஜீவப்பிரஹ்மங்களின் ஒருமைவடிவ விடயம் குறிக்கப்பெற்றதாம்.

[மூன்றாவது வருணகத்தாற்பயனைக் கூறுகின்றார்.]

த்யஜாமீதம் ஸர்வம் த்ரயாணாமிஹ ஸித்தயே.

ஆண்டு அவாந்தரப் பிரயோஜனமாகிய அர்த்த தர்ம காமங்கட்கு ஈண்டென்பது உபலக்ஷணமாம். ஐகிக ஆமுஷ்மிகங்களின் (இகபரங்களி லுள்ளவைகளின்) சித்தியின் பொருட்டு. துறக்கத்துற்ற உடற் போக்கியங்களின் சித்தி ஈண்டு யாங்ஙனமாமெனக் கடாவற்க, அதன் காரணீபூத அதிர்ஷ்டம் ஈண்டு சித்திக்கப்பெறுவதால் அவையும் ஈண்டு சித்திக்கப்பெறுதலின். இவ்விப்பத்திர புஷ்ப பலாதிகளைக் கிடைத்தபடி தியாகிக்கின்றேன், சிவத்திற்குச் சமர்ப்பிக்கின்றேன் என்பது பொருள். ஆதலின், ஐகிகார்த்தமாய தனம் பொன் வெள்ளி முதலியவற்றையுமடைந்து, ஐகிக காமமாகிய மாலை சந்தன வனிதை மைந்தன் மனை முதலியவற்றைச் சாதிப்பேன்; பாரலௌகிகார்த்தமாய தருமத்தைக் கருமோபாசனாதியாற் சம்பாதித்து பாரலௌகிக காமத்தை, துறக்கமுதல் பிரஹ்மவிஷ்ணு ருத்திர சக்திலோகம் வரைச் சாதிப்பேனென்பது கருத்தாம். விரக்த [அவஸ்தையாலினிது சாதிக்கப்பெற்ற பரமப்பிரயோஜனத்தைக் கூறுகின்றார்.] த்யஜாமீதம் ஸர்வம் மோக்ஷஸித்தயே இதி. ஈண்டிஃது தபிப்பிராயமாம்:—முதலில் அஞ்ஞ அவத்தையிற் செய்த சகாம கருமோபாசனோபோகசமயத்தே விடயசுகத்தின் அநித்தியத் தன்மையையனுபவித்து அதன்கண்ணிட காமனாய்ச்செய்த நித்தியப் பிராயச்சித்த நிட்காமகரும மகி

மையால், விவேக வைராக்கியாதிகளை யடைந்த யான் மோக்ஷ சித்தியின் பொருட்டு ஸர்வம் த்யஜாமி; அஹம், தேகாதி யந்தக்கரணம் வரையும், இல்ல முதற் பிரஹ்ம லோகம் வரையும் உள்ள அத்தியஸ்தப் பிரபஞ்சம்யாவும் அநாதியவித்தையால் ஆன்மாவின்கண்ணே தாம்பிற்பாம்பு இப்பியில் வெள்ளிபோலப் புலப்படினும், தியாகிக்கின்றேன்; கனுப்பொருட்போல ஆண்டுவாதனையை விடுத்து அந்நினை வையும் தியாகிக்கின்றேன்; நிர்வாசனையனுவேன் என்பது பொருள். எடபயனின் பொருட்டெனின், வீடடையும் பொருட்டாம். ஆண்டிது முறையாம்:— விடயசுகமனித்திய மாதலின் அதில் வாதனையொருவிச் சமாதி சம்பாதித்து ஆசிரிய ரருளிய தத்துவமசியாதி வாக்கிய சிரவணத்தியாலாய அபரோக்ஷ ஆன்மஞானப் பிரசண்ட மார்த்தாண்டப் பிரகாசத்தால் நீக்கப்பெற்ற அஞ்ஞான தமத்தையுடையயான் அகண்டைகரச சத்திய ஞானனந்த ஆன்மலாப முற்றவனுய்ச் சோகமற்றவனுய்ப் பரமானந்த ஆன்மவடிவமாக ஈண்டே பவிப்பேன் என்பது பொருள். அஹ என்னும் பதங் கோடலால் "**ஆன்மவத்துச் சோகத்தைக் கடக்கின்றன்; பிரஹ்ம முணர்ந்தோன் பிரஹ்மமே யாகின்றன்; யாவன் அந்தப் பரப்பிரஹ்மமே யாகின்றனனே அவனீண்டே அமிருதத்தை அயிலுகின்றனன்.**" என்பன முதலிய சுருதிகள் அனுக்கிரகிக்கப் பெறுகின்றன. உடற்பொறி முதல் மதிவரையுற்ற ஆன்மவாதிகளும் கண்டிக்கப் பட்டவராவர்.

மயலினதிஷ்டான ஆன்மசேடத்தன்மை யறைதலானே சூனி யவாதியரும் கண்டிக்கப்பட்டவராவர். முதலுரை முற்றும்.

𑌓𑌂 𑌨𑌮𑌃𑌶𑌿𑌵𑌾𑌯. 𑌅𑌥𑌵𑌾 𑌨𑌮𑌸𑍋 𑌵𑌾𑌚𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑌣𑌾𑌮𑍋 𑌦𑍈𑌨𑍍𑌯𑌲𑌕𑍍𑌷𑌣𑍇 । 𑌦𑍈𑌨𑍍𑌯𑌂 𑌸𑍇𑌵𑌾𑌦𑌯𑌃 𑌜𑍍𑌞𑌪𑍍𑌤𑌿𑌃 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌃 𑌸𑌂𑌪𑍍𑌰𑌸𑍀𑌦𑌤𑌿 ॥ 𑌨𑌾𑌮𑌾𑌦𑌿𑌦𑍇𑌵𑌦𑍇𑌵𑍇𑌶𑌂 𑌸𑌕𑌾𑌮𑍋𑌽𑌪𑌿 𑌚 𑌕𑌾𑌮𑌧𑌵𑌾 । (3)

அல்லது நமசின் வாச்சியம் பிரண மந்தயி
னியமடை வதற்கே
செல்லுதைனியமும் சேவையே யுணர்வு
சித்தியே லாப்போருள் களின்றன்
வெல்லுறு தேவ தேவவீ சனையான்
வேட்கையை யுறுபவ னுயே
அல்லது வேட்கை யறுபவ னுயே
அநுதினம் பணிதரு வேனல். (2)

[இனி யிரண்டாவது வியாக்கியானம்]. அத்வா என: அல்லது, வேறோராருய் நமசின் வாச்சியம் பிரணுமமாம்; நமஸ்காரமாம் அதன் பயனைக் கூறுகின்றார், தைனியமடைவான் என. ஈச்சுர நமஸ்காரம் பயனுடைத் தென்பதன் கண்ணே "ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்குச் செய்த ஒரு நமஸ்காரம் பத்துப் பரிமேதயாகங்கட்கொப்பாம்." என்பது முதலிய ஸ்மிருதிகள் பிரமாணங்களாம். தாமே தைனியசப்

தத்தின் பொருளைக் கூறுகின்றார், செல்லுதைனியமுமென. பயன் பகர்கின்றார், வெல்லுறு தேவ என. ஆண்டு, வேட்கையுறும்பக்ஷத்தே பொருளிதுவாம்:—தேவ தேவேசனைப் பணிவேன்; யாதின் பொருட்டெனின், தைனியமெனப் பெயரிய சேவைகிடைக்கும் பொருட்டு; பரமபக்திப் பிராப்தியின் பொருட்டென்பது கருத்தாம். நிம்பார்க்க ஆசாரியராலும் தாமியற்றிய தச சுலோகியின்கண்ணே தைன்யமகான்மியம் கூறப்பட்டுளது **"தயாழகந்தைன்யாதியுற்றவிடத்தேயாம், அதனுனே பிரேமை விசேடமாய அநன்யபக்தி அதிபதிக்கும் மகான்மாவிற்து முண்டாம், அஃதுத்தமமாயது, சாதன வடிவமாயது, பரமாயது"** பரபக்தியின் மகான்மியக் குறிப்பாக தேவஹூதியை நோக்கிக் கபிலதேவரது வசனம் **'பக்தி, சித்தியினும் உயர்ந்ததாம்'** சர்வவஸ்துக்களின் சித்தியாவது, இம்மை மறுமைகளிலுள்ள மாலை சந்தனமுதல் பிரஹ்மலோகமீறாய சகல ஐசுவரியமுங் கிடைத்தற் பொருட்டு என்பது பொருள். அகாமரோ உணர்வுறற் பொருட்டு, உணர்வெனும் ஆன்மசொரூப சாக்ஷாத்கார வாயிலாய் மோக்ஷமடைதற்பொருட்டுப் பணிவனென்க. இதனுனே ஈசுரர் போகமோக்ஷத்தைக் கொடுப்பவராதலினானும், சுதந்திரராதலினானும் அவரையே யுபாசிக்குக; அந்நியரையுபாசியாதொழிக வெனவுரைத்ததாயது. மோக்ஷங்கொடுக்குந் தன்மையானே அசங்கத் தன்மையும் நிரூபித்ததாகும். இரண்டாவதுரை முற்றும். (2)

ஓம் நம꞉ஶிவாய꞉। நக்⁴நாதிஷ்யதே ஸ்வபா⁴வ விக்ரு
திஜக³தா³காரத꞉। ஹேநம꞉தே³வதே³வேஶ நேஹநா
நாஸ்திஶம்ப⁴வ꞉॥ (4)

நீகழறு நஞ்ஞினனே சேகவுரு வானபாவ
விகிருதிவிடலாதும் விபுதர்த மிறையினீச
நிகழுமிங் கற்பநாநா நீகழவ தில்லையென்னும்
புகழுறுந் தோனியினனே போன்றுறு மசனமாமே. (3)



[இனி மூன்றுவதுரை]. நக்⁴நேதி. நம꞉ ஶிவாய என்பதன்கண்ணே ஹேசிவ! ஹேதேவேச! நஞ்ஞென்னும் அவ்யயத்தானே ஜகதாகாரமா யிலங்காநின்ற பரமேசுரராய தங்களுடைய பரிணாமமாகிய பாவரூப விகாரமும்; அதாவது, ஆகாசாதிகளும் உடல் மனமுதலியவும் நிடேதிக்கப்படு கின்றன. யாங்ஙனமெனின், "மசி பரிணாமப்பொருளில்" என்னுமுரைப்படி கிடைத்த மசிப்பகுதிக்கு நிகழ்காலப் படர்க்கை ரூபம் 'மஸ்யதி' யென்பதாம். 'நமஸ்யதி' விபரிணாமத்தை யடையாதது என நம என்பதாகும் குவிப் விகுதியை யீற்றுடைத்தாய் அபரிணாமி, அவிகாரியெனப்பொருள்பட்டு நிற்கும்; அதன்விளியில், ஹேநம! வெனவாம். எவ்வளவை யானே பரமேசுரர்க்கு அவிகாரித்தன்மையாம் எனக்கடாவின், நீகழ மிங்கற்பநாநாநீகழவதில்லை யென்னும் புகழுறுந் தோனியினனே என்க. "மனதானே இஃதடையத்தக்க

தாம். ஈண்டு நாநா அற்பமு மின்றம். மிருத்தியுவினின்றும் அவன் மிருத்தியுவை யடைகின்றன். யாவனீண்டு நாநாப் போற் பார்க்கின்றனனே" என்னுங்கடவல்லி சுருதியினுனே என்றுணர்க. பொருளிதுவாம்:—ஆசாரிய ஆகமங்களாற் சீர் திருத்தம் பெற்ற மனத்தால் ஏகரசமாயடையத் தக்கதாம். அறியத்தக்கது ஆன்மாவே; வேறென்று மின்றும். இவ்வான் மாவையடைந்த மாத்திரத்தே நாநாவற்றை நிலைபெறுத்துவ தாய அவித்தை நீங்கினமையின், பிரஹ்மத்தின்கண்ணே நாநா அணுமாத்திரையேனும் இன்றும்; பழுதையையறிந்த போது பாம்பே போலும்: யாவன் நீங்காத அவித்தையை யுடையவனுய்ப் பிரஹ்மத்தின்கண்ணே பழுதையை யறியாது பாம்புபோலத் தேகாதிகளை ஆன்மாவென்பன முதலிய நாநாப் போற்காண்பனே, அவன் மிருத்தியுவினின்றும் மிருத்தியுவை யடைவன்; அதாவது, மீண்டு மீண்டும் ஜன்மமரணுதி வடிவ மாய சம்சாரத்தையடைவன்.

[நம: என்னுஞ் சப்தார்த்தத்தைக்கூறிச் சிவாய என்ப தன் கண்ணுள்ள அய என்பதன் பொருளை யுணர்த்து கின்றார்.]

अयेति रूपेणैतस्य तत्त्वा [illegible]
[illegible]ः। [illegible]
[illegible]नम्॥ (5)

அயவேனி னடைவி யென்னும் அருத்தமா மாதலானே
சுயஞ்சுத்த வடிவ மாகித் துலங்குகின் றேனியா னித்தம்
செயும்பர னுமந் தேகஞ் செறிமனை முதல வாய
வயம்பெறு பொருள்க டம்மின் வளரபி மானக கேடே.

அய = அடைவி, எனப்புகலின், எதையாண்டடைவிப்ப தென அவாவரக்கூறப்பெறுகின்றது பிரணுமமென. தேகாதிகள், அன்னமயாதி கோசபஞ்சகங்களாம். மனைமுதலியவை, சகலபூதபௌதிக ஆகாசாதிபதினன்கு உலகவடிவமாய ஜகத்தாம். அபிமானமோ, இதுயானுயுள்ளேன் எனத் தேகாதியபிமானமாம். இஃதெனக்குளது, இஃதெனக்குற வேண்டும் என இம்மை மறுமைக்கண்ணுள்ள போக்கிய விசேட மனை முதலியவற்றின் அபிமானமாம். இவ்விரண்டு வகை அபிமானத்தின் நீக்கமே பிரணுமமாம். இஃதியாங்ஙனமாலோ வெனின், கேட்டி! பிரணுமமென்பது ஆன்ம சமர்ப்பண வடிவமாமாதலின், கூறிய இரண்டபிமானங்களையும் விடாமல் ஆன்மசமர்ப்பணஞ் சம்பவியாதாம். யானே தங்களைப்பணிந்து தங்களுடைய பக்தனுய்த் தேககிரகாதியபிமானம் விடுபட்டுளேனுதலின், எப்பொழுதுந் தூயவனுயிருகின்றேன்; அதிகாரியுமாவேன்; ஆகையால், அடியேனையே ஆன்மாவின் கண்ணே அடைவிப்பீராக என்பது கருத்தாம். அபரிணுமியாய் நிர்விகார நிரவச்சின்னமாய்ச் சந்ததம் ஏக வடிவமாயிருக்கும் தங்களிடத்தே வேற்றிடத்திற்குச் செல்வதேபோலச் செல்கை சம்பவி யாமையினுனும், அடியேனுக்கு

முண்மையாய்ப்பூரண வடிவமாய தங்களினும் அபின்னத்தன்மையானே தங்களுருவத்தன்மை யுண்மையினுலும், வெளிப்படுதலின்றியவன் போன்ற அடியேனையே ஆன்மஞான நற்கொடையான் வெளிப்பட்டவன் போன்ருக்கிப் பரிபூரணுநந்த ஏகரச ஆன்மாவாகவே அடியேனைச் செய்யவேண்டுமென்பது கருத்தாம். மூன்ருவதுரை முற்றும்.

ஶிவொ ப்ரஹ்மாதிரூபேண ஶக்திபிஸ்த்ரிபிஸ்
ஸஹ। நிர்மலதுரீயரூபேண நிர்குணம் ப்ர
ஹ்ம தத்பரம் ॥6॥ நமஶ்ஶிவாயேதி மந்த்ரேண த்யாந
மேவ। சதுர்த்யா தாதாத்ம்யஸம்பந்த: கத்யதே
ப்ரஹ்மாத்மநோ:॥ (7)

சிவம்பிர மாதி வடிவமாய்த் திகழுந்
திரிவித சக்திக ளோடும்
நிவர்த்தரு மலது ரியமே யாகு
நிர்க்குணப் பிரமதற் பரமாம்
நவம்பெறு நமசின் றிறநம னத்தே
நமனமெய்த் தியானமே யாதும்
தவம்பெறு முயிர்க்குச் சதுர்த்திதன் றனே
சாற்றுவ ரயிக்கு வோற் றுமையே. (5)

[இனி நான்காவது வியாக்கியானம்]. சிவமென = சிவமாகிய பரமான்மா, தனது மாயையா லாக்கப்பெற்றனவும்,

ஈக்ஷணாதி வியாபார ஹேது பூதங்களுமாய சிருஷ்டி திதி சம்ஹார சக்திகளோடு கூடியதுமாய்ப் பிரஹ்மாதி ரூபங்களாம். ஆண்டு "ஈசுரர்கட்கு மேலாய அம்மகேசுரரை" என்பதாதி சுவேதாசுவதரசுருதியுளவாம். "உலகுதய திதிலய காரணர்களான பிரஹ்மவிஷ்ணுருத்திராகளாய ஈசுரர்கட்கும் மிகவும் மேன்மையர் மகேசுரராவர்; என்னை, ஈசுரர்களின் அத்தொழில்களும் அவரததீனமாதலின் என்க" எனப்பாடிய வசனமுளதாம். "சத்துரூபப் பிரஹ்மத்தினின்றே ஈக்ஷண வாயிலாய்ப்பிரகிருதி யுண்டாயது. அதனினின்றே புருடனுண்டாயினன். அவ்விருவரும் ஆகாசவாணி கூறியபடி செய்ததவமகிமையானுண்டாய ஜல சயனத்தினின்றும் நாராயணீ நாராயண நாமமுடையவராயினர். நாராயணரது நாபிக்கமலத்தினின்றும் பிரஹ்மாவினுற்பத்தி. விஷ்ணுவின் நல்வரவு. அவர்களினையப்பாட்டை நீக்குவான் இலிங்கத்தின் வெளிப்படுகை. அந்தப்பிரமாணத்தை யறியாதபோது ஐந்து திருமுகங்களையுடைய சிவன் வெளிப்படலும், வரப்பிரதானமும், உருத்திரரூப உற்பத்தி. பிரகிருதியினின்றும் பிரஹ்மாணி, இலக்ஷுமி,காளிகளின்உற்பத்தி. பிரஹ்ம விஷ்ணுருத்திரர்கட்கு அவர்களைக்கொடுத்தல்" எனச்சிவபுராண இரண்டாவதத்தியாயத்தேயுளதாம். ஈண்டு காரணாதிசத்தினின்றும் ஈக்ஷணாதி நிரூபிக்கப்பட்டிருத்தலினாலும், ஜடப்பிரகிருதிக்கு அதுகூடாமையினாலும், பிரகிருதி வடிவத்திற்கும் ஈக்ஷணமாத்திரத்தன்மை நிரூபித்திருத்தலினாலும் சாங்கியாதிமத நீக்கமாம்.

இதனாற் சகுணோபாசனை கூறப்பெற்றதாகும். [இனி நிர்க்குண துரியப்பிரஹ்மவடிவச்சிவத்தைப் பிரதிபாதிக்கும் மாண்டூக்கியசுருதி கூறப்பெறும்.] "பிரபஞ்ச உபசமமாயும், சாந்தமாயும் உள்ளசிவத்தை அத்வைதமாகவும், நான்காவதாகவும் நினைக்கின்றனர்; அஃதான்மா, அஃதறியத்தக்கதாம்'' என்னும் மாண்டூக்கிய சுருதியையே பின் பற்றிக்கூறுகின்றார்:—அல்லதெனெ. அல்லது=வேறு பக்ஷத்தே, சிவசப்தத்தானே சகுணமும் நிர்க்குணமுமாய பிரஹ்மங் கூறவுங் குறிக்கவும் பெறுகின்றது. சிவசபதார்த்ததைக் கூறி, நம: சப்தார்த்ததைக் கூறுகின்றார்:—நமசினற்ற நமனத்தேயென. நம: சப்ததிற்கு வணக்கத்தேயாற்றலாம். நமனம என்பது, நஃ எனப்பாவத்தே அசுங விகுதியாம். நம: சப்தத்தின் இலக்கியார்த்தத்தைக் கூறுகினறார்:—நமன மெய்த்தியானமேயாகுமென. தியானமெனபது நிதித்தியாசனமாம். சிவாய என்பது தாதர்த்தியத்திற் சதுர்த்தயாம, அதற்குப் பொருளோ சிவத்தின் பொருட்டெனபதாம். அதாவது, பிரத்தியக்கானமதாதாத்மிய இலாபத்தின் பொருட்டென்பது பொருள். அங்ஙனமாகவே வாக்கியார்த்தமிஃதாம்:—யான் சிவதாதாத்மிய இலாபப்பொருட்டு நமனத்தை அதாவது, நிதித்தியாசனத்தைச் செய்கினறேன், அதனால் தியானஞ் செய்பவனையும் தியானத்தையும் அறவே விட்டுப் 'பிரஹ்மமாக யானிருக்கின்றேன்' என்னும் திய்யமாத்திரத்தைக் கோசரிக்கும் அஞ்ஞாத விருத்திப்பிரவாக சம்பாத

னத்தானே ஆன்மாவின்கண்ணே ஒருமைப்படுகின்றேனென்பது பொருள்.

[இவ்வாறு ஆன்மநிஷ்டனாய்த் தன்னைப் பரிபூரண ஆநந்த ஏகரசமாய்க் கண்டவனது ஆனந்தகானத்தைக் கூறுகின்றார்.]

அஹம் ஶிவஃ ஶிவோஹஞ்சேத்ய வேதாந்தநிஷ்டயா । அத்வைதம் நிஜமித்யுக்தம் வேதைஃ ஶாஸ்த்ரைஶ்ச ஸர்வஶஃ ॥ (8)

**அகஞ்சிவஞ் சிவம்யா னென்ற அருமறைச் சிரத்தி லுற்ற**
**சுகநிட்டை யதனி னானே சுபமனு சந்திப் பேனியான்**
**மிகவுமிங் கிந்த வாறே நமவென மீழற்ற லாய**
**வகையெலா வற்றி னாலும் வருமறை நூல்க ளானே.(6)**

அகம் சிவம், சிவம்யான் என. இவ்வாறு நம என்பதன்றியானப் பொருளின்கண்ணே துவைக் கூறுகின்றார் :— எக்காரணத்தானே "ஆன்மா, ஹேமைத்திரேயீ! காணத்தக்கது, கேட்கத்தக்கது, மநனிக்கத்தக்கது, நிதித்தியாசனஞ் செய்யத்தக்கது." என்பன முதலியவற்றால் சர்வ வேதங்களும், "ஹே அர்ச்சுன! அந்தயோகி தைரியமுடைய மனத்தாற் பையப்பைய மனநிரோதஞ்செய்க; பிரத்தியக்கான்மாவி னிலைப்பதாய் மனத்தைச்செய்துகொண்டு பின் சிறிதளவுஞ் சிந்தனை செய்யற்க" என்பன முதலியவற்றால்

சாஸ்திரங்களும் தியானமே செப்பலாயதோ, அக்காரணத்தால் நமசப்தத்தினது கருத்து மிவ்வாறு கூறப்பெற்றது "நமன மெய்த்தியானமே யாகும்," என. இவ்வாறு வேதாந்த நிஷ்டையால், தத்வமசி, அகம்பிரஹ்மாஸ்மி, என ஆன்ம நிஷ்டனுவேன் என்பது பொருள்.

[மந்த மத்திய அதிகாரிகளை யுத்தேசித்துக் கூறுகின்ருர்.]

ஈயவாஉாவஸவாஹஸேஹம் டாவஜ தீரணம்।
ஜதெ்யவநசீ ஜதா்ாகூம் வெடுெஷிஃஶாஜெஷஸூ
ஸவபூஶஃ॥ (9)

அல்லது தாச னேயான் அகமிகத் தாச னென்றே
சொல்லுத லிதுவே நல்ல நமவெனச் சொல்ல லாதும்
வல்லன வாய வெல்லா வகையினு னருளும் வீரத்
தோல்லவன் சொல்லும் வேத நூல்களாற் றேன்று
[தோட்டே. (7)

ஈயவாஉாவ வஸவா என.

நம: சப்தம் நமஸ்காரப் பொருட்டாமெனக்கருதிக் கூறுகின்ருர்:—நமவென, நமஸ்கரிக்கின்றேன் என நவிலுதலே, அடியனேயான், யானடியன் என அறைதலாம்; ஏனெனின், எல்லா வகையானும் எல்லாவேதங்களானும் "ஈசானன் சர்வ வித்தைகட்கும். ஈஸ்வரன் எல்லாப்பூதங்கட்கும்" என்பன முதலியவற்ருல் சர்வபூதரியந்திருத்துவங் கூறப்பெறும் வாயி

லாய்ப் பூதங்கட்குத்தாசத்தன்மையும், ஈசுரனு லேவப்படுந் தன்மையும் கூறப்பெற்றுளது. "ஹே அர்ச்சுன! அந்தரியாமியாகிய ஈசுரர் யந்திரத்தின்கண்ணே ஆரூடமாய காஷ்டமயப் பிரதிமைகளைப் போலச் சர்வப் பிராணிகளையும் மாயையால் யாண்டாண்டோசுழல்விப்பவராய் அவர்தம் ஹிருதயதேயத்தே யிருப்பார்" என்பன முதலிய சாஸ்திரங்களானும் ஈசுர அதீனத்தன்மை கூறப்பெறும் வாயிலாய்ச் சீவர்கட்குத் தாசத்தன்மையே கூறப்பெற்றுளதாமெண்க.

[illegible] ॥ (10) [illegible]
[illegible]
[illegible] ॥ (11)
[illegible] ॥ (12)

அல்லதித மிதஞ்சருவம் அகற்றிடுவேன் பரத்தை
யடைதரவே அறம்போருளோ டின்பமிச விழைந்தே
வல்லஜக தீசுரனே மறைமறையின் முடியில்
வளருமிவை மந்திரத்தின் பொருள்மெய்யுணர் பவர்தா
நல்லமுத்தி பெறவறியத் தக்கதுதத் துவத்தின்
நவில்கருப்ப நவின்றனரின் வீடுறமெய்ப் பதுப்பா
லல்லதுமன் னினைந்திடுக மனத்தோடுமந் திரத்தா
லயலாகச் சகதருதே வேசனைநன் கறிந்தே. (8)

[இஞ்ஞான்று நம: சப்தத்தின் தியாகார்த்தத்தன்மைப் பிரதிபாதனத்தான் முற்புகலுற உபாசனேயை ஈண்டும் அநுவதிக்கின்ருர்; வருஞ்சுலோகத்தே விசேடார்த்தம் வழங்கும் வேட்கையிருத்தலின்].அல்லதென,இஃதிஃதென்னுமியாவற்றையும் பரமேசுரரது அடைவின்பொருட்டு, அதாவது அனுக்கிரகப்பொருட்டு, தியாகிப்பேன், பத்திர புட்ப பலாதிகளேச் சமர்ப்பிப்பேன். யாதை வேட்டு விடுகின்ருய் எனின்? அறம் பொருளின்பத்தையும், ஜகதீசுரரையும் விழைந்தென்க. அறம் பொருளின்பங்களெனச் சகுணேபாசனம், பரமேசுரத்தன்மையென நிர்க்குணேபாசனம். ஈண்டுப் பூர்வாசாரியர் சம்மதியையும், தாங்கருதிய பொருளேயும் கூறுகின்ருர்:—இவையென, இவையெல்லாம் சகுணேபாசனமும் நிர்க்குணேபாசனமுமாம்; வேததற்பரராய மந்திரார்த்த முணர்ந்த கருமோபாசன நிஷ்டர்கள் கருமோபாசனத்தை நிர்ணயித்தனர். அவ்வாறே தத்துவத்தை யுணர்ந்த வேதாந்த தற்பரர்களாகிய ஜகதீசுரோபலக்ஷிதமாய பிரஹ்மோபாசன தற்பரர்கள் பிரஹ்மோபாசனத்தை நிர்ணயித்தனர் என்பதாம். ஈண்டுக்கருதிய பொருளேக் கூறுகின்ருா:---யாது தத்துவ கருப்பமாமோ அதாவது, சாஸ்திர தாற்பரியார்த்தகோசரமாமோ அதாவது, ஆன்மதத்துவ ஞானர்த்த சாதனமாமோ, முத்தியடைதற்பொருட்டு அதுவே யறியத்தக்கதாம். ஆண்டுக்கரும சகுணேபாசனமோ முறையேமுத்திசாதனமும், பிரஹ்மோபாசனமோ நேரேவீடடைதற்கும் ஆம் என அறி

யத்தக்கதாம். இனி மீண்டும் உத்தம அதிகாரியை நோக்கி யுரைக்கின்றார்:—அல்லதென, மேதாவிகட்குமுறையே வீட்டைத்தரும் உபாசனையால் ஆகவேண்டுவதென்னே! வீடடைதற்பொருட்டு விவேகத்தானே பகுத்தல் வாயிலாய் ஆன்ம தத்துவம் அறியத்தக்கதாம். விஞ்ஞானப் பிரகாரத்தைக் கூறுகின்றார் :—விவேகத்தோடு கூடிய மதியான், "அஃதியாண்டுந் தூயது" என்பதாதியானும், தத்வமசி முதலிய மகாவாக்கியத்தானும், ஜகத்குருவாயும் ஈசுரராயுமிருக்கும் மகாதேவரை ஜகத்கர்த்திருத்துவ சர்வஞ்ஞத்துவாதி அத்யஸ்தாதி ஈசோபாதியினின்றும், அந்தக்கரணாதி அத்தியஸ்த ஜீவோபாதியினின்றும் வேறாக அந்நிஷேத அதிஷ்டானமாயும், அசங்கமாயும் இரஜதாதி விவர்த்த அதிஷ்டானமாகிய சுக்தியாதியைப் போல் உண்மையாயுணர்ந்து அவ்வநாரோபித வடிவமாகிய பரதத்துவத்தையே தியானிக்கத் தக்கதாம்; "**பிரஹ்மமாகயானிருக்கின்றேன்**" என அநுசிந்திக்கத் தக்கதாம் என நான்காவது வியாக்கியானம் முற்றும்.

ஓம் நமஶ்ஶிவாய. நமோऽஸ்து நம: ப்ராக்ஞாஜ்ஞா
ஸ்யாஜ்ஜகதீஶ்வர । தஸ்மாத்ஸோऽஹமிதீத்யேவம் ஜ்ஞா
நம் ப்ராப்யாத்மநி ॥ (13) ஸூக்ஷ்மம் ஏதஜ்ஜகத்ஸர்வம்
தத்வயம் ஶ்வப்நமாத்மந: । தஜ்ஜ்ஞாநாத்விஶ்வஸ்ய கார
ணம் ப்ரஹ்மதத்த்வத: ॥ (14) நமோऽஸ்யாஸ்த்ருஷ்டிஶலோ

𑌸𑌂𑌸𑌾𑌰𑍋 𑌨 𑌸𑌂𑌶𑌯𑌃। 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌦𑍇𑌵𑍍𑌯𑌾𑌦𑌯𑍇𑌽𑌪𑍇𑌹
𑌵 𑌲𑌕𑍍𑌷𑍀𑌂𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌂𑌸𑌨𑌾𑌤𑌨𑍀𑌮𑍍॥(15) 𑌯𑌸𑍍𑌮𑌾𑌦𑌾𑌨𑌂𑌦𑌰𑍂𑌪𑌵
𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌮𑍇𑌦𑍇𑌵𑍇𑌵𑍇𑌶𑌕𑍍𑌤𑍇𑌨𑌶𑍍𑌯𑌾𑌵𑍇𑌸। 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌦𑍇
𑌹𑍍𑌯𑍋𑌮𑍀𑌶𑌾𑌶𑌕𑍍𑌤𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂𑌸𑌾𑌵𑌧𑌾𑌨𑌤𑌃 ॥ (16)

நமவோடு அச்சுச் சேர நமவென நவிலலாத
மமைவுறும் ஐந்தா வென்ப தகிலத்திற் கீசனென்றே
சமைவுறு மதனி னுனே தாசன்யா னென்னவிங்ஙன்
எமையேணி யாத்துமாவினிடத்தினிலிசைவிப் பாயே.

உலக மியாவு முறந்த மிதன்கணே
ஒலிக ளாடுவ னேவெனவை தன்மயம்
இலகதன் வானத் தாற்சிவ மேன்னலாம்
சலமில் காரண ப்ரஹ்மநற் றற்பரா. (10)

மாயே வற்கிலை லக்குமி மன்னனே
ஆய யானவன் றேவனே யம்மிலை
யீய வேண்டுமீண் டேயெனக் காதலின்
வேய லக்குமி யாம்பழம் வித்தையே. (11)

எதனி னுன்ன்ப நுபனி ணேயினி
விதம றையர ராற்றுதி வேய்ந்துளீர்
அதனி னுலெற் கருளும்யோ கீசரே
பதித பாவன பத்திர ஞானமே. (12)

[இனி ஐந்தாவது வியாக்கியானம்]. நமேயென, நமஸ்காரப் பொருளுடைய நம தாதுவிற்குப் பசாதிகட்கு அச் என்னும் விதியால் அச்விகுதியுறவே நமதியென நமவாம். வணக்க கருத்தாவாகிய உபாசகன் கூறப்பெறுவன். அவ்வாறே ஐந்தாவென்பது, ஜமு=அயில்வதிலாம், இத்தாதுவிற்குத் திருச்விகுதி முடிபுறவே ஜமதி யென ஐந்தாவாம், யாவற்றையும் உண்பதாம், உபசம்ஹார்த்தாவெனச் சகதீசராகிய சிவத்தே பிரயோகமாம். சிவமே ஐந்தா வென்னும் சப்த வாச்சியம் யாங்ஙனமாம்? என்னும் அவாமிகின், சிவசப்தத்திற்கும் அப்பொருட்டன்மையுண்மையின் என்றுணர்க. அஃதாமாறு:—இணசிக்கட்குவன், உபதைக்கு இத்வமாகும், யாவுமிதன் கண்ணே சயனிக்கின்றன வெனச்சிவமாம், சம்புவென்பது, அதுவும் சர்வ சம்ஹார்த்தா வென்பது கருத்தாம். அதனது விளி ஹேசிவ! உபசம்ஹார்த்தா! வணக்கஞ் செய்யும்யான் றங்கள் தாசனுயிருக்கின்றேன். யாவன் எதிற் சிரத்தையுடையவனே அவன் அதுவே யாவன், என எனை நினைந்து ஆன்மாவின் கண்ணே அடைவி, ஆன்மவடிவஞான நன்கொடையால் ஆன்மவடிவமாக என்னைச் செய்தியென்பது கருத்தாம்.

[இனி ஆறுவது வியாக்கியானம் அறையப் பெறும்]. சுஷிநிதி: எல்லா வுலகும் சயனிக்கும், அதாவது:—பிரளய காலத்தே இலயத்தை யடையும் இதன் கண்ணெனச்சிவ சப்த உபபாதிதமாய அவ்யக்தமாம், பிரகிருதி யென்பது

பொருள். அவ்வாறே சப்தகாமி யென்னும் வாக்குவிடய மாய் நாமவுருவடிவமாய பிரபஞ்சக்கூட்டம் யாவை திதிகாலத் தேபோலத் திகழுமோ, தேகேந்திரியாதிகளும், பூ சுவர்க்காதி களுமாய அவை தன்மயமாம்; அதாவது பிரகிருதி மயமாம்; பிரகிருதியின் பரிணாமமேயாம். அவ்வாறே சுருதியுமுளது:— "நாமதேய விகாரம் வாக்கு மாத்திரமேயாம், மண்ணென் பதே உண்மையாம்" என. அதன் வானத்தால், அவ்யக் தத்தினுடைய வானத்தால்; வனனத்தான் பாவத்தில் கஞ் விகுதியாம், அச்சி என்னும் அவ்வியக்தமாகிய பிரகிருதியை, வன்யதி அதாவது, நாமவுருவங்களாய் விரிக்கின்றது; அதா வது ஆகாசாதிவிபாகத்தை யடைவிக்கின்றது எனச்சிவமாம். டப்பிரத்யய முடிபாம். காரணம் பிரஹ்ம சிவ சப்தத்தாற் கூறப்பெறும்; ஹேதற்பரா! அதாவது பிரஹ்மதற்பரா வென் பதாம். அல்லது, வாகதிகம் தனங்கட்கென்னுந்தாதுவினது வானசப்தமாம், அவ்வானத்தான் அவ்வவ்வியக்தத்தைத் தன் பால் அவ்வியக்த ரூபத்தான் நிலை பெற்றதை வானத்தான் அதாவது, சூசனத்தான்; அதாவது, நாமரூபங்களாய் வெளிப் படுத்தலான் என்பதாம். [சிவசப்தார்த்தத்தைக் கூறி நம சப்தார்த்தத்தைக் கூறுகின்றார்.] நமோயஸ்யாஸ்தி என. ஈண்டு மா சப்தம் இலக்குமி வாசகமாம் "இந்திரைலோக மாதா மா," என அமரத்தின் கண்ணே அறையப்பட்டிருத் தலின். எவ்வெனக்கு இலக்குமியின்றோ அத்தகைய யான் நமசப்த வாச்சியனாவேன். இலக்ஷ்மிஹீனனாய தரித்திர னாயிருக்கின்றேன். ஈண்டையமின்றாம். இஃதியாங்ஙனமெ

ணிற்கேட்டி! ஹேலக்ஷ்மீச! மாயேச! பிரகிருதிக் கதிபதியே! தேவனாகிய யான் தீவ்யதி விஜி கீஷதி, அதாவது தரித்திரமாகிய அஞ்ஞானத்தை நிராகரிக்க இச்சிக்கின்றேன் எனத்தேவன்; அத்தரித்திரத்தை நீக்கி இலக்குமியாகிய வித்தையை அடைய இச்சிக்கின்றேன் என்பது பொருள். ஆகையால் யான் ஞானாதிகாரியாயிருத்தலின், விரக்தனாய் முமுக்ஷுவாய் அதிகாரியாய எனக்குக் கொடுத்தருள்வீராக. இப்பிறப்பின்கண்ணே இலக்குமியாகிய ஐசுவரியத்தைக் கொடுத்தருளல் வேண்டுமென்பதாம். அவ்வைசுவரியம் யாதெனின் கூறுகின்றார்:—சநாதனியாய், முக்காலத்தும் பாதிக்கப்படாததாய், ஏகரசமாய், அபரிச்சின்னரூபமாய், சாம்பிராஜ்ய லக்ஷுமியாயிராநின்ற பிரஹ்மவித்தை யென்க. [இப்பொருளையே வேறு சுலோகத்தால் வெளிப்படுத்துகின்றார்]யஸ்மாதிதி. எதனால் தாங்கள் பிரஹ்மாதி தேவதைகளாலும் வேதங்களாலும் ஆநந்தரூபமாய்க் கூறப்பெறுகின்றீர்களோ, அதனால் ஹேயோகீச! அடியேனுக்குச் சொரூபவுணர்ச்சியைச் செய்விப்பதும், ஆன்மாநந்தத்தைக் கொடுப்பதும் ஆகிய ஆன்ம சாக்ஷாத்காரரூப ஞானத்தைக் கொடுத்தருளல் வேண்டுமென்பதாம்.

ஓம் நமஃஶிவாய:. யஸ்மாத்ஸ்வம் நேதிநேதீதிநஞ்
ப்ரூயாச்ச்ருதிவேதஜா। தஸ்மாந்நேனாவசிஷ்டம் யத்ஞேயநேதா
ஜாலந்தாநமோநம: ॥ (17)

**நீரேதனினுன் மறைபேறு நேதிநே தீயதேன்**
**றநமில்போரு ளளவையி னமருமா றமைப்பீ**
**ரேரதினமோ வாதிர்மங் கலமேனக் கேலு**
**மோரதினுழல் சிறுமையும் பேருமையா யுறுமே. (13)**

[இனி ஏழாவது வியாக்கியானம்]. யஹூாகுஜி.தி. ஹே பகவன்! எக்காரணத்தால் தாங்கள் பிருகதாரண்யவேதத் தாற் கூறப்பெற்ற நேதிநேதி யென்னும் நஞ்விஷயமாகிய அதாவது, நிஷேதிக்கப்பட்டனவாகிய சகலமூர்த்தாமூர்த்த வடிவ ஆகாசாதிப் பிரபஞ்சமும், அதன்வாசனைவடிவமாய அந்தக்கரணுதி அத்தியஸ்தப்பிரபஞ்சமும், அளவையாலளக் கப் பெறுந்தன்மைச் சம்பாதனத்தால் விவகார விடயமா மாறுசெய்வீர்கள். அளவைக்கருவியாகிய படியானது நெல் கோதுமை முதலியவற்றைத் தன்பாற் கொள்ளலாலும் விள் ளலாலும் அளவைக்குவிடய மாமாறு செய்தும் தானேபற் றற்றிருப்பதேபோல, தாஙகளும இவவுலகை விவர்த்தரூப மாய்த் தங்களிடத்தே உதயஞ்செய்வீர்கள், தாங்களோ நிடேதக்குறிப்பேபோலச் சொரூபத்தானே அசங்க ஏகரச சச்சிதாநந்த வடிவமாயிருப்பீர்கள்; கண்டாமன்றே விஃதை உலகத்தே மகாரஜன மென்னும் வத்திரம் போலும். ஆண்டு மகாரஜனமோ அரிதாரத்தால் இரசதமாம், அஃதுடைவத் திரமும் மகாரஜனமெனப்பெறும். இவ்வாறு மங்கையர் முத லிய விடய சையோகத்தாற் சித்தத்திற்கும் வாசனைவடிவ இரஞ்சனுகார முண்டாம், அதுவே நஞ்ஞால் நிஷேதிக்கப்படு

கின்றது; ஆகையால் நமோசி; யாங்ஙன மிவ்வாறு குறித்தல் எனின் கூறுகின்றூர்:—நேதிநேதி யெனக் குறித்தலாம் இந்நகார மிரண்டும் அடைவுற்றன யாவற்றையும் நிடேதிக் கின்றன. இவ்வாருகவே சர்வோபாதி நிராகரண வாயிலாய்ச் சைந்தவரசம்போ லேகரசமும், பிரஞ்ஞானகனமும், அந்தர மற்றதும், பாகியமற்றதும், உண்மைக்கு முண்மையும் ஆகிய பிரஹ்மம் யானு யிருக்கின்றேன் என ஆன்மாவின் கண்ணே நிலைபெற்ற பிரஞ்ஞையாம். யாங்ஙன மிவ்வாறு பிரஹ்மத் தைக்குறித்த லெனின் கூறுகின்றூர். நஹெ்யதஸ்மாதிதி. ந என்பது அயல்பரமாம். எதனுல், நஇதி நஇதி, இதனி னின்றும் அயல்பரம் குறிக்கத்தக்கது நாமரூப ரகித ஆன் மாவிற்கு இன்ருமோ அதனுல் இதுவேகுறிப்பாம்: பிரஹ்மத் திற்கென்ப. இனி நாமதேயம் பிரஹ்மத்திற்கு நாமமே நாம தேயமாம். அஃதென்? "உண்மைக்குண்மை பிராணன்களு ரமாயுண்மை அவற்றுள்ளும் இஃதுண்மை" என நம: சப் தப்பொருளாம். ஆகையால் நமோசி, அதாவது சகல நிஷேத அதிஷ்டானமாய்ச் சர்வாசிரயமா யிருக்கின்றீர்கள் என்பதாம். இவ்வாருய தங்களுடைய சொரூப ஞானத்தான் அடியே னுக்கும் கல்யாணமே யுண்டாம். அக்கல்யாண மென்னெ னின் கூறுகின்றூர்:—யதோஜாதோz நமோ நம: என. எக்காரணத்தால் யான் பரிச்சின்னமாக என்னை நினைந்த வனுயினும், இயல்பாகவே துணியப்பெற்ற அபரிச்சின்ன வடிவமாயினேனே; சர்வாசிரய மல்லாதவனுயிருந்தும் சர்வா சிரய முடையவனுயினேனே என்பது பொருள்.

ஶிவம்ஶிவயோர்வ்யாப்த:ஶிவாயேதி நிகத்யஸே ।
ஶிவாயத்வேதயா வ்யாப்த்யா ஶிவாயம் குரு ஸர்வதா ॥

சிவாசி வஞ்சிவ மேங்குநி றைதலாற்
சிவாய வென்றுநீர் செப்பப்பே றுகின்றீர்
சிவாய வெற்கங்ஙன் சேருமா சேர்த்தியே
சிவாயஞ் சந்ததஞ் செய்து திகழ்விரே. (14)

[நம சப்தார்த்தத்தைக் கூறிச் சிவாய சப்தார்த்தங் கூறுகின்றார்.] ஶிவம்ஶிவமிதி. சிவம், அதாவது சகலோபத்திரவமற்றது; மீண்டும் சிவம், நிரதிசய அகண்ட ஏகரச ஆநந்த வடிவமாம்; யாண்டும் பரிபூரணத் தன்மையானே அடைவுற்றது; ஆதலின் தாங்கள் சிவாயவென நூற்களாற் கூறப் பெறுகின்றீர்கள். ஹே சிவாய! பரிபூரண அநந்த வடிவ! அடியேனுக்கு அவ்வாறு அடைவித்தலால், அதாவது, சிவாயத்தன்மையாகிய பரிபூரணத்தன்மையை அடைவித்தலால், அடியேனையும் சந்ததம் பரிபூரணாநந்த வடிவமாக்குவீராக.

ஓம் நம:ஶிவாய ॥

ஶிவாம்யாதோ மஹாஹர்ஷ்ய நமோஹம் மாயயாத்ருவம் ।
ததோ நமாய மஹ்யம் மே ஶ்ரீஶிவாயம் குரு ஸர்வதா ॥

வித்தை யுற்றமி தகலி யாணனே
யத்தை யற்றவ னியான்றிண்ண மாயையால்
வித்தை யற்றவே னக்கத னுல்விளை
யெத்தி றத்துஞ் சிவாயமி யற்றுநீ. (15)

[இனி எட்டாவது வியாக்கியானம்]. ஶிவாௗயா தஜஉதி சிவையென்னும் பிரஹ்ம வித்யாரூபசக்தியை யடைந்திருத்த லின் சிவாயவென்பவாம். விளியின்கண்ணே ஹே சிவாய! வெனவாம். அதனுனே ஹே! மகாகல்யாணரூபரே! நீர் சிவா யவாகின்றீர் அதாவது, நிஜவடிவத்தில் நிலைபெற்றவராகின் றீர். யானோ மாயையால், அதாவது அவித்தையால், பிரகிருதி வாசகத்தன்மையானே பிரசித்தமாகிய மாயாசப்தத்திற்கு அவித்தை வாசகத்தன்மையின்கண்ணே சுருதிவாக்கியப் பிர மாண மிதுவாம்:—"ஜீவஈசுரர்களை ஆபாசமாகச்செய்கின்றது மாயையாகவும், அவித்தையாகவுந் தானேயாகின்றது" ஊ, இலக்ஷ்மியாகிய வித்தையெவனுக் கின்றோமோ அவன் நம வெனப்படுவன். யான் நமவாவேன், வித்தையற்றவனு யிருக் கின்றேன் என்பது நிச்சயமாகும். யாதினுல் யான் வித்தை யற்றவனோ அதாவது, ஆன்மவித்தை யவாவுடையவனுவ னோ; தேவரீரோ சர்வஞ்ஞ சர்வேசுரராதலின் பூரண வித் தையை யுடையவராயும், சரணடைந்தவரைக் காப்பவராயு மிருக்கின்றீரோ; அதனுல் வித்தையற்றவனுய என்பொரு ட்டு அதாவது, ஆன்மதரிசனப் பொருட்டு என்பதாம். இந்த மச்சப்தவாச்சியமாய் இதந்தைக்கு விடயமாய சர்வதிருசியக் கூட்டங்களையும் சிவாயஞ்செய்தல் வேண்டும். யாங்ஙனம்மச் சப்த வாச்சியமாயிதந்தைவிடயம் யாவுமாதல் எனின்? பொ ருந்துமாறு மச்சப்தத்திற்கு விற்பத்தி கூறுகின்றுர்:—மசிபரி ணுமத்தில் தைவாதிக: இப்பகுதிக்கு "க்விப்" விகுதியுறவே

ரூபம் "மஸ்யதி" யெனவாம். பரிணமித்து, விகாரபாவத்தை யடைகின்றது என 'ம' ஆம். பரிணுமியாய தேக கேகாதிப் பிரபஞ்சக் குப்பைகளா மிவ்வியாவற்றையும் சிவாயஞ்செய்ய வேண்டும் ; தங்கள் வடிவத்தானே ஒளிர்விப்பீராக. எல்லா வகையானும் தங்கள் வடிவத்திற்கு வேருகத்தோற்ருவாறு செய்தல் வேண்டு மென்பது கருத்தாம். அதனுல் யான் தங்கள் வடிவமாயே இதங்தைவிடய மியாவற்றையும் அடியேனை யும் காண்பேன். அவ்வாறே ஸ்மிருதியின் கண்ணும் "வாசுதேவனேயாவுமெனக்காணும் அம்மகான்மா மிகவுங் கிடைத்தற்கரியன்" எனக் கூறப்பெற்றுளது.

ஓம் நம:ஶிவாய ॥

ஶிவமேஷி யதோ ஜக³த்யா ஶிவாய ஸ்வம் ப்ரவர்த்
ஸே । நமேதோயாயதோ ஜக³த்யா நமோவேதே:
ப்ரவர்த்யதே ॥ (20) நமோஹம்ச ஶிவாயொஹம் நமோ
மஹ்யம் நமோ நம: । நமோ நமோய ஶூக்ஷ்மாய மஹ்யாய
நமோ நம: ॥ (21)

சிவமுணருதி ரறிவினினுதலிற் சிவாயவா யிசைந்தீர் நீர்
தவவுமக்கிலை யுணர்வினுன்மாயையதானமோ மறை [யோதும்
நவவகமு நமோவகஞ்சிவாயவே நமவேற்து நமோநம:
நவ நமநமத் தூயமங் கலசிவ நாதற்கு நமோ நம: (16)

[இனி யொன்பதாவது வியாக்கியானம்]. ஶிவஶேஷீதி. ஞப்தி யென்பது ஞானமாம்; அதாவது, தன் வடிவ வெளிப் பாடாம். அதனுல் நிரதிசயாநந்த வடிவ ஆன்ம தத்துவ மாகிய சிவத்தை யறிகின்றீராதலின், நீர் சிவாயவாவீர். இண கதியில் இதற்கண் விகுதியிவ்வுருவமாம். இங்ஙன் நூற்க ளால் நுவலப்பெறுகின்றீர். அவ்வாறே அந்த ஞானத்தானே அதாவது, சொரூப சாக்ஷாத்காரத்தான் உமக்கு மாயையும் உபாதியாகிய அவித்தையும் இல்லையாதலின், நீர் நம: என நவிலப் பெறுகின்றீர். இருப்பதில்லை மா யெவர்க்கோ அவர் நம: எனப்பெறுவர். "இந்திரைலோகமாதா மா" என மா சப்தத்தான் லோக மாதாவாய்ச் சகத் கர்த்தாவாய்ப் பிர கிருதி யென்னும் அவ்யச்தங் கூறப்பெறும். அஃதகண்டாத் வைத ஏகரச ஆநந்தவடிவமாகிய உமக்கின்ரும். "அவ் யக்தத்தினின்றும் பரன்புருடன் வியாபகன் அலிங்கனே யாவன்" எனச்சுருதியுமுள்ளது. இவ்வாறு வேதங்களால் நம: வென்பது கூறப்பெறுகின்றது. கூறியதற்குப் பயனைக் கூறுகின்ரூர்:—நமோ ஹ்ரிதி. யானும் உமதனுக்கிரகம் பெற்றவனுய் ஆன்ம வடிவத்தை யறிந்தும் உம்மினும் ஒரு சிறிதையும் என்பாற் பாரேன்; உமது சொரூபமாகவே யா வற்றையும் பார்ப்பேன். இவ்வாறு ஏகான்மதரிசனத்தான் அவித்தையற்ற யான் அவித்தை விடுபட்ட தன்மையனுத லின், சிவாய: =சொரூபதிர்ஷ்டாவுமியான். ஆகையால், என் பொருட்டு, எனது புகழ்ச்சியின் பொருட்டு; நமோ நம:,

நமோயம் நமோயம், நிரவித்யோயம் நிரவித்யோயம் என இருமுறையால் நம: சப்தம் அறிஞராற் பொருத்தப்பெறுகின்றது. ஒன்பதாவது முற்றும்.

[இப்போது ஆன்மலாப சந்துஷ்டராய்க்கூறிய விசேஷண விசிஷ்டபகவானாகிய சம்புவை நமஸ்கரிக்கின்றார்]. நமோ நமோய வென. நமாய, அவித்தை யற்றவருக்கு, அதனானே தூயருக்கு, நிர்விகாரருக்கென்பதாம். தூய்மையானே மங்கலருக்கு, அதாவது ஆநந்தந் தருபவருக்கு நமஸ்காரம், நமஸ்காரம்.

நமோ நமஸ்தே ஶம்போ நிராகாராய தே நம: ।
நிர்குணம் நிஷ்க்ரியம் ஶாந்தம் நித்யாநித்யாஶ்ருதயோ
ஜகு: ॥ நமோஸ்து நிராகாரம் ஶிவாயம் ஶிவவல்லபா । கதாஹம்வந்தேஹம் ஶிவாயோஹம் நமஸ்ஸ்யம்॥

நமவி காரமில் சம்புவே வடிவறு நாதநின் றன்போற்றி
அமர்து ணந்தொழி லற்றசாந் தமதேன்ப வாதிய மறை [போற்றும்
நமவ டிவறு சிவாயமேய்ப் பிரமமாய் நண்ணுதிர் சிவ [நாளு
மமைய கழும தானமா மங்கல சிவாயயா ளையின்றே.

[மீண்டும் வியாக்கியானித்த நாமங்களை நமஸ்கரிக்கின்றார்]. நமோ நமஸ்திதி. ஹே சம்போ! தேவரீருக்குப சு

னம், பரிணமம், ஆகார விசேஷம் இன்ரும்; தேவரீர் நமா ஆயிருக்கின்றீர். ஆதலின், ஹே நமோ ! நிராகாரமாய தேவரீருக்கு நமஸ்காரம். நிர்விகாரத்தன்மையின் கண்ணே சுருதியைப் பிரமாணிக்கின்ருர்:—"நிஷ்களம் நிஷ்க்ரியம்ஸாஞம்" என்பன முதலிய சுருதிகள் தேவரீரை நிராகாரமென்கின்றன; எனப்புகழுகின்றன வென்பதாம். மீண்டுஞ் சிறப்பிக்கின்ருர்:—நமோஸ்து ஹே சிவ! தேவரீர் நம: சப்தத்தாற் கூறப்பெற்ற நிராகாரராயும், சிவாய மென்னும் பரிபூரணராயு மிருக்கும் பிரஹ்மமாயிருக்கிறீர், எப்போதும் ஏகரசமாயிருக்கிறீர், தேவரீருக்கும் பூரணத்தன்மை யுண்மையினனும், அடியேனுக்கும் தங்களுருவத் தன்மை யுண்மையினனும், யானும் நம:=பரிணமரகித னவேன்; சிவாய:=பரிபூரணரூபனுமாவேன். இதன்கண்ணே யாதொரு ஐயமு மின்ரும்.

**அறமுறு முறைநவ மணிக ளார்ந்தது**
**அறிஞர்கண் மனத்தினுக் கழகை யீவது**
**இறைதிருச் சங்கர னிதய பூடணம்**
**நிறையரன் பெயரணி நிறைந்து வாழ்ந்ததே. (18)**

ஓம் நம:ஸிவாய ॥

[இவ்வண்ணம் பஞ்சாக்ஷர மகாமந்திர வியாக்கியானம் இயம்பினேம். இப்போது சாரீர சூத்திர பாடியதாற்பரிய

கர்ப்பிதமிஃதாம் என்னும் உணர்வின் பொருட்டுச் சாரீரக பாடிய சங்க்ஷிப்ததாற்பரிய அம்சம் இப்பாடிய வியாக்கியா னத்தே ஒரு சிறிது அடங்கி யிருப்பதை வருணிப்பாம்]. "𑌅𑌥𑌾𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑌾" என்பது முதலதிகரண சூத்திரமாம். அதனது பொருளிதுவாம்:—𑌅𑌥 என்பது சாதனசதுஷ்டய சம்பத்தியின் பின்னர் எனவாம். 𑌅𑌤 என்பது எதனுல் பிரஹ்மத்தினும் வேருக விளங்குவதாய அத்தியஸ்த அநித்தியப் பிரபஞ்சம் பொய்யாதலின், அதன திஷ்டான பூதமாய பிரஹ்மமே சத்தியமாமோ, அதனுல் எனவாம். பிரஹ்ம ஞானத்தின் பொருட்டு விசாரம்செய் யத்தக்கதாம். என முதலதிகரண அர்த்தங் கூறப்பெற்றது. அவ்விசாரப் பொருட்டு அத்தியாசமும் நிரூபிக்கப் பெற் றது. அதுவும் முதல் வியாக்கியானத்தே யுள்ளடங்கியதாம். ஆண்டு "𑌤𑌦𑍍𑌵𑌿𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑌸𑍍𑌵" என இதந்தைவிடயமாய் அத்தியஸ்த சர்வப்பிரபஞ்சத்தின் நிடேத வாயிலாய் அகண் டானந்தைக வடிவப் பிரஹ்மமே உண்மையாதலின் உண் மையாய் ஆராயத்தக்கதென அறையப் பெற்றதாம்.

இனிப்பிரதம அதிகரணத்தே பிரஹ்மம் விசாரிக்கத் தக்கது என விளம்பப்பெற்றது, ஆனுலந்தப் பிரஹ்மம் எத் தகைய இலக்கணத்தை யுடையது என்னும் அவாவுறவே இரண்டாவததிகரண சூத்திரம் வந்துற்றது:—"𑌜𑌨𑍍𑌮𑌾𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌯𑌤𑌃" நாமரூபங்களால் விரிக்கப்பெற்றதும், கருத்திருத்

தன்மை போக்திருத் தன்மைகளோடு கூடியதும், மனத் தானும் சிந்திக்கத்தகாத செயற்கை வடிவினதும் ஆகிய இச் சகத்திற்கு, ஜன்மாதி—ஜன்மஸ்திதி பங்கம் சர்வஞ்ஞ சர்வசக் தியையுடைய எக்காரணத்தாற் பவிக்குமோ, அது பிரஹ்ம மென வுணரத்தக்கதாம். இஃதிரண்டாவததிகரணப் பொரு ளாம். இதுவும் ஆருவது வியாக்கியானத்தே யுள்ளடங்கும்; ஆண்டு சகல ஜகத்காரணீ பூத மாயேசத்தன்மை நிரூபித் திருத்தலின்.

இரண்டாவததிகரணத்தே ஜகத்தின் காரணம் பிரஹ் மமெனக் கூறப்பெற்றது. அதன் கண்ணேது பூதமாய மூன் ருவததிகரணம் "ஶாஸ்த்ரயோநித்வாத்" அநேக வித்தை யின் ஸ்தானங்களாய் விரிந்திருப்பதும், தேவ திரியக்கு மநு டாதிகளின் வருணுசிரமாதி வியவகார ஹேதுவும், சர்வார்த் தங்களையும் விளக்கிக் கொண்டிருப்பதும், சர்வஞ்ஞ துல்லிய முற்றதும் ஆகிய இருக்கு வேதாதி சாஸ்திரத்திற்கு, யோநித் வாத்—காரணமாதலின், புருட நிசுவாசம் போல அம்மகத் பூதயோனியினின்றும் இச்சாஸ்திரத்தின் சம்பவமாம் என் னும் ஸ்மரணமுளது. அல்லது சாஸ்திரம், யோனி—காரணம் எந்தப்பிரஹ்மத்தின் வடிவத்தை மெய்ம்மையாயறிவதற்கோ; இது மூன்ருவததிகரணப் பொருளாம். இதுவும் ஆருவது வியாக்கியானத்தின் கண்ணே யடங்கும். ஆண்டு, "இதன் கண்ணே எல்லாவுலகும் சயனிக்கின்றது" என்பதாதியால்

சர்வகாரணத்தன்மையும், "எதனாலாநந்தரூபராகிய தேவரீர் தேவர்களாலும், வேதங்களாலும் புகழப்பெறுகின்றீர்" எனச் சாஸ்திர யோனித்தன்மையும் ஆகிய இருவிதமுங் கூறப்பெற்றன.

மூன்றாவ ததிகரணத்தே பிரஹ்மத்திற்குச் சாஸ்திர யோனித்தன்மை கூறப்பெற்றது; அதன் கண்ணேதுவாக நான்காவததிகரணம் நவிலப்பெறும். "தத்து ஸமந்வயாத்" சர்வசக்தியை யுடையதும், ஜகதுற்பத்தி ஸ்திதி லயகாரணமும் ஆய அந்தப் பிரஹ்மம் வேதாந்த சாஸ்திரத்தா லறியப் பெறுகின்ற தென்பதில், யாங்ஙனம் சமன்வயத்தான் சர்வ வேதாந்தங்களிலு முள்ள வாக்கியங்களியாவும் தாற்பரியத்தானே அப்பொருளைப் பிரதிபாதிப்பதில் தொடர்ந்து நிற்பனவாம்? அவையாவன:—ஹே விவேகியாய மைந்த! "இஃதுண்டாதற்கு முன் சத்தாகவே யிருந்தது, ஒன்றே யத்துவிதம்" என்பவையாம். எதனாற் சர்வ வேதாந்தங்கட்கும் பிரஹ்மத்தின்கண்ணே சமன் வயமாமோ, அதனாற் சர்வ ஜகத் ஜன்மாதிகாரணமும், சர்வஞ்ஞமும், சர்வ சக்தியையுடையதும் பிரஹ்மமேயா மென்பது நான்காவ ததிகரணார்த்தமாம்; அதுவும் ஆறாவது வியாக்கியானத்தின்கண்ணே யுள்ளடங்கும்; ஆண்டு "[illegible] காரணம் [illegible]" எனப் பிரஹ்மத்திற்கே சர்வகாரணத் தன்மையை நிரூபித்திருத்தலின் என்றுணர்க.

இவ்வண்ணம் நான்கு சூத்திரத்தே நான்கதிகரணங்க ளால் சர்வஞ்ஞும் எனவும், சர்வசக்தியையுடைய தெனவும், ஜகத்காரணமெனவும், சர்வாதிஷ்டானமெனவும், உண்மை யெனவும் பிரஹ்மமே நிச்சயிக்கப் பெற்ற மாத்திரையான் அதை யுணரும் பொருட்டு விசாரம் செய்யத்தக்கதாமென நிரூபிக்கப் பெற்றது. ஆண்டு வேறு யாதேனுமொன்றற்கு ஜகத் காரணத்தன்மை சம்பவிக்குமா? சம்பவியாதா? என் னும் ஐயநீக்கப்பொருட்டு ஐந்தாவததிகரண சூத்திரமாம். "ஈக்ஷதேநாஶப்தம்" என்பதாம். அற்றேல், அநேக வடிவமாய பிரதானத்திற்குப் பரிணமஞ் சம்பவித்தலின், அநேக வடிவமாய ஜகத்காரணத்தன்மை பொருந்தும்; மண் முதலியபோலும். சேர்க்கையற்ற ஒரு வடிவமாய பிரஹ்மத் திற்கின்றும் என விங்ஙனடைவுறுங்கால், "ஈக்ஷதேநாஶ ப்தம்" என்னுஞ் சூத்திரம் பிராப்தமாம். சாங்கியராலி னிது கற்பிக்கப்பெற்ற அசேதனமாகிய பிரதானம் ஜகத்கார ணமாக வேதாந்தங்களி லாசிரயிக்கத் தக்கதன்றும்; எதனுல் "அஶப்தம்ஹிதத்" அசப்தமே யஃதாமோ; அதாவது, ஜகத்காரணத் தன்மையானே வேதப்பிரதிபாதித மஃதன் றுமோ. யாதினுற் பிரதானத்திற் கசப்தத்தன்மை யெனின், "ஈக்ஷதேஃ" காரணத்திற்குப் பார்வை கேட்கப்படுதலின்; யாங்ஙனம்? இங்ஙனமன்றோ கேட்கப் பெறுகின்றது:—ஹே விவேக மைந்த! "இஃதுண்டாதற்கு முன்னர்ச் சத்தாகவே யிருந்தது, ஒன்றே யத்துவிதம், எனத் தொடங்கி; 'அநேகம்

பிரஜைகளாகவாவேன்' என அது பார்த்தது'' எனக் கார ணத்திற்குப் பார்வை கேட்கப் படுதலின், ஜடமாய பிர தானத்திற் கஃதசம்பவமாதலின், பிரதானம் ஜகத்காரண மன்றும். இஃதைந்தாவ ததிகரணப்பொருளாம். இதுவும் ஆருவது வியாக்கியானத்தே யடங்கும்; ஆண்டு, "உலகமி யாவு முறங்கு மிதன்கணே, ஒலிகளாடுவனேவெவை தன் மயம், இலகதன் வானத்தாற் சிவமென்னலாம், சலமில் காரணம் ப்ரஹ்மநற்றற்பரா'' எனப்பிரதான சப்தவாச்சிய அவ்வியக்தத்தைப் பிரஹ்மா தீனமென நிரூபித் திருத்தலின் என்க. எஞ்சிய ஆறதிகரணங்களில், ஆநந்தமயத்தன்மை, ஆதித்ய அந்தர்க் கதத்தன்மை, ஆகாசஜ்யோதி பிராணுதி சப்தப்பிரதிபாத்யத்தன்மை முதலியவை அப்பரமான்மா விற்கே கூறப்பெற்றவையாம். அவற்றிற்கும் ஆண்டேயுள் ளடக்கமாம்.

இனி முதலாவதத்தியாயத்தினது இரண்டாவது பாதத் தே ஏழதிகரணங்களால் வெளிப்படாப் பிரஹ்மலிங்கங் களாற் பிரஹ்மமே யுபாசிக்கத்தக்க தெனவும், பிரதான ஜீவாதிகள் உபாசிக்கத்தக்கன வன்றெனவுங் கூறப்பெற்றன. அதுவும் இரண்டாவது வியாக்கியானத்தே யடங்கும்; ஆண்டு "வெல்லுறு தேவ தேவவீ சனையான் வேட்கையை யுறுபவ ஞயே, அல்லது வேட்கை யறுபவனுயே அனுதினம் பணிதரு வேனுல்'' எனப்பிரஹ்மமே யுபாசிக்கத்தக்கதென நிரூபித் திருத்தலின் என்றுணர்க.

இனிமுதலாவ தத்தியாயத்தினது மூன்ருவது பாதத்தே பதிஞன்கதிகரணங்களால் பிரஹ்மத்திற்குச் சர்வாதிஷ்டானத் தன்மையும், சிரேஷ்டத் தன்மையும், அக்ஷரசப்தவாச்சியத் தன்மையும், பிரணவத்தா லுபாசியத் தன்மையும், பிரகாசகத் தன்மையும், விஞ்ஞானமயாதி சப்தவாச்சியத் தன்மையுங் கூறப்பெற்றிருக்கின்றன. அதுவும் எழாவது வியாக்கியானத்தே அடங்கும்; ஆண்டு, "ஶிவம்ஶிவயோதா வாதவு" என்பன முதலியவற்ருற் சிரேஷ்டத் வாதிகளும், சர்வரூபத்தன்மை, சர்வாதிஷ்டானத் தன்மை முதலியவையும் நிரூபிக்கப்பட்டிருத்தலின் என்க.

முதலாவதத்தியாயத்தின் நான்காவது பாதத்தே எட்டதிகரணங்களான் மீண்டும் பிரதானகாரணத்தன்மையின் நிராகரணவாயிலாய்ப் பிரஹ்மத்திற்கே காரணத் தன்மை கூறப்பெற்றது. அதுவும் ஆருவது வியாக்கியானத்தே யடங்கும்; ஆண்டும் பிரதானத்திற்குப் பிரஹ்மாதீனத் தன்மை நிரூபித்தல்வாயிலாய்ப் பிரஹ்மத்திற்கே சர்வகாரணத்தன்மை நிரூபிக்கப்பட்டிருத்தலின் என்றுணர்க.

முதலாவதத்தியாய வியாக்கியானம் முற்றும்.

இனி அவிரோதமெனப்பெயரிய இரண்டாவதத்தியாத்தினது முதற்பாதத்தே பதின்மூன்றதிகரணங்களாற் சாங்கிய ஸ்மிருதியாதி விரோதபரிகாரஞ்செய்து நிர்க்குணமாய பிரஹ்மத்திற்கும் விவர்த்த அதிஷ்டானத் தன்மையானே பிர

கிருதித் தன்மையும், நிமித்தத்தன்மையும் சாதிக்கப்பட்டுளது; அதுவும் ஆருவது ஏழாவது வியாக்கியானத்தே அடங்கும்; ஆண்டு, ஆருவது வியாக்கியானத்தே பிரகிருதிக்குச் சுதந்திர நிஷேதவாயிலாய்ப் பிரஹ்மத்திற்குக் காரணத் தன்மை விதித்திருத்தலின். ஏழாவதின் கண்ணே "யஸ்மாத்வம்ரெந திநெதீகி நஞுயஓம்ரோவஷிவெஷஜம்" என்பதால் விவர்த்தாதிஷ்டானத்தன்மைப் பிரதிபாதனத்தால் அசங்கத்தன்மை நிரூபிக்கப்பட்டிருத்தலின் என்றுணர்க.

இரண்டாவதத்தியாயத்தினது இரண்டாவது பாதத்தே எட்டதிகரணங்களாற் சாங்கியன் முதல் பௌத்தன் ஈருக வுள்ள மதகண்டனஞ் செய்யப்பட்டிருக்கின்றது. அதுவும் நான்காவது வியாக்கியானத்தே யடங்கும்; ஆண்டு, "சிவம் பிரமாதிவடிவமாய்த் திகழும் திரிவித சக்திகளோடும்" எனப் பிரகிருதி யீருய யாவற்றிற்கும் அத்தியஸ்தத்தன்மைப்பிரதிபாதனத்தானே அகண்டைகரசத்துரிய ஆன்மாவிற்கே யுண்மைப் பிரதிபாதனத்தன்மை யுண்மையினனும், உடன் முதன் மதியீருய பிரபஞ்சம் அத்தியஸ்த மாதலின், தோற்ற மாத்திரமே என்னும் பிரதிபாதனத்தானே அநான்மத்தன்மை நிரூபிக்கப்பட்டிருத்தலினனும், அவற்றின் நிராகரணத்தானே சாங்கியாதியரும் நிராகரிக்கப்படுவர்; அவர்கட்கு அம்மாத்திர ஆன்மத்தன்மை யபிமான முண்மையினனும், பிரதான பரமாணுமுதலியன பிரகிருதியின்கண்ணே யடங்குதலின

னும் என்றுணர்க. ஆன்மாவே யுண்மையெனக் கூறப்பெற்றிருத்தலினுனே சூனியவாதி மதமும் நிராகரிக்கப்படும்.

இரண்டாவதத்தியாயத்தின் மூன்ருவது பாதத்தே பதினேழதிகரணங்களால் ஆகாசத்திற்கு அநித்தியத்தன்மையும், சொரூபத்தையுடைய பிரஹ்மத்தினின்றும் வாயுவினுற்பத்தியும்; இம்முறையே பிரஹ்மத்திற்கு ஜகத்ஜனகத் தன்மையும், ஜீவனுக்குப் பிரஹ்ம ரூபத்தன்மையுங் கூறப்பெற்றன; அதுவும் ஆருவது, ஏழாவது வியாக்கியானத்தே யடங்கும்; ஆண்டு, பிரஹ்மமேசர்வகாரணமென்னும் பிரதிபாதனத்தான் ஆகாசாதிகட்கு ஜன்னியத்தன்மையானே அநித்தியத்துவப் பிரதிபாதனத்தானும், "ஶிவாய தைவதாய ஸ்வாஹா ஶிவாயம் காரணம்" என ஜீவனுக்குப் பிரஹ்ம ரூபத்தன்மை நிரூபணத்தானும் என்க.

இரண்டாவதத்தியாயத்தின் நான்காவது பாதத்தே ஒன்பததிகரணங்களால் பொறிகட் கான்மாவினின்றும் உற்பன்னத் தன்மையும், பரிச்சின்னத் தன்மையும், தேவதாதீனத் தன்மையும், ஈசுரனுக்கே பிராணாதி நிர்மாத்திருத் தன்மையும் கூறப்பெற்றன; அவையும் நான்காவது வியாக்கியானத்தே யடங்கும்; ஆண்டுச் சிவத்திற்குப் பிரஹ்மாதி ரூபத்வப்பிரதிபாதனத்தானே பிராணேந்திரியாதி காரணத்வ நிரூபணஞ் செய்திருத்தலின் என்க.

**இரண்டாவதத்தியாயம் முற்றும்.**

இனிச் சாதனமெனப் பெயரிய மூன்ருவதத்தியாயத்தின் முதலாவதுபாதத்தே ஆறதிகரணங்களால் வருஞ்சரீரபீஜரூபபூத சூக்ஷ்மமப்பற்றுடைய ஜீவனுக்கே இவ்விடத்தினின்றுங்கமனம்—எறல், னென்முதலியவற்றே யிறங்கல், ஜீவனுக்குப் பிறப்பின்று; மற்ருே பற்றுறன் மாத்திரம்; முதலாகுதியின்கண்ணே சிரத்தா சப்தத்தான் அப்பின் பிரதிபாதனம், உபாசனையின் பலபோக்திருத்தன்மை என்பன கூறப்பெற்றிருக்கின்றன; அவையும் நான்காவது வியாக்கியானத்தே அடங்கும்; ஆண்டு, "ஶிவொஹ்யாஹீர-ஹிவஸ்யாஸ" என்ப தாதியால் பஞ்சாக்கினி வித்தைமுதலியவற்றிற்கும், அடையத்தக்கனவாய பிரஹ்மலோகாதிகட்கும் அதிஷ்டாதா பரமான்மாவாகியசிவமெருமானேயென நிரூபிக்கப்பட்டிருத்தலினனும், "அறம்பொருளொ டின்பமிகவிழைந்தே வல்ல ஜகதீசுரனே" எனச்சகல கருமோபாசனையின் பலபோக்கியமினிது கொடுத்தலும் பரமேசுரனுக்கேதகுமென நிரூபித்திருத்தலினனும் ..ன்றுணர்க.

இனி மூன்ருவதத்தியாயத்தின் இரண்டாவது பாதத்தே எட்டதிகரணங்களால் பிரஹ்மத்திற்கு அசங்கத் தன்மையை நிரூபித்தற் பொருட்டுக் கனு முதலிய சிருஷ்டிக்குப் பொய்ம்மையும், பிரஹ்மத்திற்கு நிடேத அதீதத் தன்மையானே சத்தியத்தன்மையும், அதனினும் அயலாயதற்கு அவஸ்துத் தன்மையும், கருமபல உற்பத்தியின் பொருட்டு ஈசுரனுக்கே கர்த்திருத்தன்மையும், அபூர்வத்திற்கத்தன்மை

யின்மையும், மற்றும் பிறவும் பிரதிபாதிக்கப் பட்டன; அவையும் இரண்டாவது வியாக்கியானத்தே யடங்கும்; ஆண்டு, "வெல்லுறு தேவ தேவ வீசனையான் வேட்கையை யுறுபவனுயே **அல்லது வேட்கையறுபவனுயே**" எனப்பிரஹ்மமே சர்வ காமத்தையுங் கொடுப்பதெனப் பிரதிபாதித்திருத்தலின் என்க.

இனி மூன்ருவது அத்தியாயத்தின் மூன்ருவது பாதத்தே முப்பத்தாறதிகரணங்களாற் சாந்தோக்கிய பிருகதாரண்யக சுருதி கூறிய பஞ்சாக்கினி வித்தை யுபாசனைகளின் விதியனுஷ்டான பலசாமியத்தான் ஏகத்தன்மை, குணேப சம்ஹாரத்தின் செய்யத்தக்கமை, நாஞ உபாசனைக்கூற்று, விகற்பத்தாலேனும், சமுச்சயத்தாலேனும் பிரதீகோபாசனையில் தனதிச்சையுடைமை, விகற்ப சமுச்சயங்களின் விழைவின் வண்ணம் என்பவை கூறப்பெற்றன. அவையும் இரண்டாவது வியாக்கியானந்தே அடங்கும்; ஆண்டு, ஈசுரன் சர்வ கரும பலப்பிரதாதாவெனக் கூறப்பெற்றிருத்தலினுனும், உபாசனைப் பிரகாரங்கட்கோ ஈசுர ஆராதனைத்தன்மை யுண்மையினுனுமென்க.

இனி மூன்ருவதத்தியாயத்தின் நான்காவது பாதத்தே பதினேழதிகரணங்களால் ஆன்மஞானத்திற்குச் சுதந்திரத்தன்மையும், கரும அநபேக்ஷத்தன்மையும், வித்தைக்குத் தனதுற்பத்தியின்கண்ணே கர்மசாபேக்ஷத்தன்மையும், ஊர்த்தரேதசு கெட்டவனது பிராயச்சித்தத்திற்கு மறுமைத்தூய்

மைச் சனகத்தன்மையும், வியவகாரத்தகுதி ஜனகத்தன்மையின்மையும், சாலோக்கியாதி முக்திகட்குச் சாதிசயத்தன்மையும், நிர்வாண முக்திக்கோ நிரதிசயத்தன்மையும் கூறப்பெற்றன. அவையும் நான்காவது வியாக்கியானத்தே அடங்கும்; ஆண்டு, ஈசுரரது பிரஹ்மாதி ரூபத்தன்மையும், தூய வடிவத்தன்மையும் நிரூபிக்கப்பட்டிருத்தலி னெனவுணர்க.

இனிப்பலமெனப் பெயரிய நான்காவதத்தியாயத்தின் முதற்பாதத்தே பதினன்கதிகரணங்களால் சிரவணுதிகளின் ஆவர்த்தனீயத் (மீண்டு மீண்டுஞ் செய்தல்) தன்மையும், உபாசனையின்கண்ணே ஆசன நியதத்தன்மையும், தியான சாதனையில் ஒருமை பிரதானமாதலின், திசை தேச காலங்கட் கநியமும், ஞானிகட் கறம்பாவப்பற்றின்மையும், பிராரப்தத்திற்குப் போகத்தானே நாசமும், சஞ்சித கரும விநாசமும், ஞாதாவாகிய ஜீவனல் தன்வடிவமாயே பிரஹ்மங்கவரப்பட்டமையும், பிரதீகத்தின்கண்ணே அகந்திருஷ்டி யபாவமும், தாரதம்மியமாய் நித்தியகருமத்தின் இருப்புண்மையும், அதிகாரிகட்கு முக்தியின் சற்பாவமும், மற்றும் பிறவும் கூறப்பெற்றன. அவையும் நான்காவது வியாக்கியானத்தே அடங்கும்: ஆண்டு, "யெ௱யஂதக்ஷஂ விவெகஃதஃ" என்பதால் விவேக தியான சமாதியாதி வாயிலாய் முக்திநிரூபிக்கப்பட்டிருத்தலி னென்க.

இனி நான்காவதத்தியாயத்தின் இரண்டாவது பாதத்தே பதினேரதிகரணங்களால் வாக்காதிகட்கு மனத்தின்கண்ணே விருத்திலயம் வடிவத்தானன்றும், தத்துவ வித்

தின் வாக்காதிகள் பரமான்மாவின்கண்ணே எஞ்சுதலின்றி இலயமாம் என்பதும், உபாசகர்க்கு மேற்ருனத்தானே கிளம்புகையும், இரவின் கண்ணும் மரித்த அவர்கட்கு இரஸ்மி கிடைத்தலும், தத்துவவித்தின் பிராணன்கள் கிளம்பாமையும், மற்றும் பிறவும் கூறப்பெற்றன. அவையும் நான்காவது வியாக்கியானத்தே யடங்கும்; ஆண்டு, பிரஹ்மாதி ரூபமாயும், நிர்க்குணவடிவுடையதாயும் பரமான்மாவிருக்கின்றதென நிரூபிக்கப்பட்டிருத்தலின் கூறியபலத்தினினிது வழங்குகையோ ஆண்டநாயாசமாயே சம்பவித்தலினென்க.

இனி நான்காவதத்தியாயத்தின் மூன்ருவது பாதத்தே ஆறதிகரணங்களால் அர்ச்சிராதிகமாய பிரஹ்மலோகமார்க்கத்திற்கொருமையும், உத்தரமார்க்கத்தாற் காரியப்பிரஹ்மகமனமும், பிரதீகோபாசகர்கட்குப் பிரஹ்மலோகத்தின் அடைவின்மையும், அவர்கள் வேறு தேவதைகளையுபாசித்தவின் அவ்வவ்வுலக கமனமும், மற்றும் பிறவுங்கூறப்பெற்றன. அவையும் நான்காவது வியாக்கியானத்தே யடங்கும்; ஆண்டு "[illegible]" எனச் சர்வ சாமர்த்தியத்தையும் "[illegible]" எனச்சகுணேபாசனத்தையும், நிர்க்குணேபாசனத்தையும் பலப்பிரதாதாவாய பரமேசுரர்க்கே நிரூபித்திருத்தலினென்க.

இனி நான்காவதத்தியாயத்தின் நான்காவது பாதத்தே முக்திரூப வஸ்துவிற்குப் புராதனத்தன்மையும், முக்தனுக்கோ பிரஹ்மத்தோடபின்னத்தன்மையும், முக்தஸ்வரூபபூத

மாய பிரஹ்மத்திற்கேககாலத்தே சவிசேஷ நிர்விசேஷத் தன்மையும், அர்ச்சிராதிமார்க்கத்தாற் பிரஹ்மலோகத்தை யடைந்த உபாசகனுக்குப் போகவஸ்துக்களின் சிருஷ்டியில் மானச சங்கற்பத்திற்கே ஹேதுத்தன்மையும், தேகாந்தர சிருஷ்டியின்கண்ணும் இச்சைப்படி நடத்தலும், ஜகத்சிருஷ்டியின் கண்ணே சுதந்திரமின்றேனும் போக மோக்ஷங்களிற் சுதந்திரமும், தேகத்தோடு கூடியிருத்தலும் இராமையும் அவனது சுய இச்சைப்படியேயாமென்பதும், மற்றும் பிறவும் கூறப்பெற்றுள்ளன. அவையும் நான்காவது அத்தியாயத்தின் ஒன்பதாவது வியாக்கியானத்தே யடங்கும்; ஆண்டு, "ஸஹம் ஶிவஃ ஶிவொஹம்வ" என்பதாதியால் முக்தனுக்கும் பிரஹ்மத்திற்கும் அபின்னத்தன்மை நிரூபிக்கப்பட்டிருத்தலினும், "ஸுயவாஊாஸவணவாஹம்" என்பதாதியால் உபாசனையும் இனி நியம்பப்பட்டிருத்தலினும், "நமொஹம்வ ஶிவாயொஹ" என்பதாதியால் நவம வியாக்கியானத்தே ஜீவனுக்கு அநாதிப் பிரஹ்மரூபத்தன்மை நிரூபித்திருத்தலினும் என்றுணர்க. ஓம் நம: ஶிவாய.

ஸ்ரீசங்கரபூஜ்ய பகவற்பாத ஆசாரியசுவாமிகளின் பிரதம சீடரும், விஷ்ணுவினவதாரமுமாகிய ஸ்ரீபதுமபாத ஆசாரிய சுவாமிகளாற் றிருவாய்மலர்ந்தருளப்பட்ட,

**ஸ்ரீ பஞ்சாக்ஷரபாடியமும்,**
**ஸ்ரீ ஹரதத்தரருளிய சுபோதினியென்னு**
**மதனுரையும் முற்றுப்பெற்றன.**

[னும்
வெங்கொடுந் தொழிலே வீக்கி வெம்பிவம் புறுவனே
கங்குலைப் பாதி வேய்ந்த கண்ணுத லைந்தெ ழுத்தே
தங்குத லுடைய நாவ னுதலிற் றயையி னனே
ஐங்கரங் கொண்ட வீர வண்ணலே யபய மீயே.

சங்கர குரவ னல்லருட் குரிய
　　தாமரைத் தாளன்றண் டையயா
லிங்கருள் நமசி வாயபா டியமும்
　　இனியசு போதினி யுரையும்
துங்கமென் றமிழிற் றேன்றியே யுலவத்
　　தூயவென் னுவினி லிருந்தான்
ஐங்கர விறைவ னருளுரு வான
　　வாரியன் வீரசே கரனே.

சுபம்!　　சுபம்!!　　சுபம்!!!



PRINTED AT THE WAVERLEY PRESS, G. T., MADRAS.

# புத்தக விளம்பரம்

| | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|
| ஸ்ரீ ஆத்ம புராணம் ... ... ... | 8 | 0 | 0 |
| ஸ்ரீமதுசூதன சரஸ்வதி ஸ்வாமிகளியற்றிய பாஷிய பகவற்கீதா கூடார்த்த தீபிகை | 5 | 0 | 0 |
| வேதாந்த மநந சிந்தாமணி ... ... | 4 | 0 | 0 |
| நியாயப்பிரகாசம் ... ... ... ... | 4 | 0 | 0 |
| தத்துவாநு சந்தானம் ... ... ... | 2 | 8 | 0 |
| கைவல்லியம் பொன்னம்பல சுவாமிகள் உரை... | 2 | 0 | 0 |
| கீதாத்திரையம், பிரஹ்மகீதை வியாக்கியானத்துடன் | 2 | 0 | 0 |
| வேதாந்த ரத்னாவலி ... ... ... | 1 | 0 | 0 |
| ஞானசாதக சஹாயம் ... ... ... | 0 | 14 | 0 |
| ஆத்திச்சூடி பாஹ்ய ஆந்தரார்த்தம் ... ... | 0 | 8 | 0 |
| பிரமகீதை மூலம் சுத்தப்பதிப்பு ... ... | 0 | 5 | 0 |
| மஹாவாக்கிய இரகசியம் ... ... | 0 | 4 | 0 |
| ஸ்ரீ பஞ்சாக்ஷர பாடியம் ... ... ... | 0 | 4 | 0 |
| சொரூபானு சந்தானம் மூலம் சுத்தப்பதிப்பு ... | 0 | 3 | 0 |
| பர்த்ருஹரி வைராக்கிய சதகம் உரையுடன் ... | 0 | 3 | 0 |
| நிரதிசயானந்தத் திரட்டு ... ... | 0 | 3 | 0 |

இப்புத்தகங்கள் கீழ்க்குறித்த விலாசங்களில் கிடைக்கும்.

வி. பி. போஸ்டேஜ் பிரத்தியேகம்.

மூர்த்தி ஸ்வாமிகள்,
நெ. 6, ஜெனரல் காலின்ஸ் ரோட்டு
வேப்பேரி, சென்னை.